வழங்குகிறோம்

# புதிய நெஸ்லே ஸெரிலாக்

## 3 இன்றியமையா மைக்ரோநியூட்ரியண்ட்ஸ்








**விடமின் ஏ** – சிறப்பான கண்பார்வை மற்றும் நோய்க்குத் தாக்குப் பிடிக்கும் சக்தி.

**இரும்புச்சத்து** – கூடுதலான சக்திக்காக.

**அயோடின்** – அதிக உடல்-உள் சக்திக்காக.

இப்போது, தினசரி இரண்டே வேளை ஆகாரங்களில் உங்கள் குழந்தைக்கு இந்த இன்றியமையாத மைக்ரோநியூட்ரியண்டுகளின் 50% ஆர்டிஏ* கிடைக்கிறது. எனவே, இன்றே உங்கள் செல்லக் கண்மணிக்கு புதிய நெஸ்லே ஸெரிலாக் அளிக்கத் தொடங்குங்கள்.




உங்கள் குழந்தைக்கு ஸெரிலாக் அனுகூலத்தை அளியுங்கள்

**IMPORTANT NOTICE: MOTHER'S MILK IS BEST FOR YOUR BABY. INFANT FOOD SHALL BE INTRODUCED ONLY AFTER 4 MONTHS OF AGE.**

महत्वपूर्ण सूचना: माँ का दूध आपके बच्चे के लिए सर्वोत्तम है। ४ महीने के बाद ही उसे शिशु आहार देना शुरू करें।

## வசதிக்கு ஒடிக்கிறார் ஜெயேந்திரர்!

✉ 10.11.2002 கல்கி இதழில் 'மனம் மாறுவோர் மதம் மாறட்டும்' என்ற தலைப்பில் தமிழ்நாட்டில் உள்ள சைவ மடாதிபதிகள் தருமபுரத்தில் கூட்டம் போட்டு, ஆகம முறைப்படி தான் கோயில் ஆசார அனுஷ்டானங்களை நடத்த வேண்டுமென்று கூறியிருக்கிறார்கள் என்றும், இதில் எல்லோர் குரலும் ஒரே குரல்தான் என்றும் மதிப்புக்குரிய ஜெயேந்திரர் கூறியுள்ளது, உண்மையை தம் வசதிக்கு ஒடித்துக் கூறியதாகும். தருமபுரத்தில் நடைபெற்ற கருத்தரங்கில் தமிழறிஞர்கள் சார்பில் நானும் கலந்து கொண்டு கருத்துரை வழங்கியவன். அங்கு நிறைவேறிய தீர்மானங்கள்:

1. ஆகம முறைப்படி அமைந்த திருக்கோயில்களில் ஆகம முறைப்படியே பூசித்தல் வேண்டும்.

2. திருமுறை ஓதல், ஓதுவித்தல் மனப்பூர்வமாக மதித்துப் போற்றப்படல் வேண்டும்.

3. திருமுறை அர்ச்சனை மனப்பூர்வமாக - இயல்பாகச் செய்தல் வேண்டும்.

4. சிவாச்சாரியார்களின் நுண்சிகை ஞானமாம் என்னும் மரபுவழி மாறாக் கோலங்களுடன் பூசனை புரிதல் வேண்டும்.

5. நித்திய நைமித்திகப் பூசையில் திருமுறை முதலியன ஓதிய பிறகே ஆசீர்வாதம் செய்தல் வேண்டும். ஓதுவா மூர்த்திகள் இல்லாத சமயங்களில் – இடங்களில் சிவாச்சாரியார்களே திருமுறை விண்ணப்பம் செய்தல் வேண்டும்.

6. ஆகம முறைப்படி அமையாத கோயில்களுக்குத் திருக்குடமுழுக்கு திருமுறைகளின் வழி நடத்தலாம்.

மேலோட்டமாகப் பார்த்தாலே முதல் தீர்மானம் தவிர, ஏனைய ஐந்து தீர்மானமும் திருமுறைத் தமிழுக்கே முதலிடம் கொடுத்திருப்பதைத் தெளிவாக அறிந்து கொள்ளலாம். அதிலும் ஆறாவது தீர்மானம், திருமுறைகளின் வழி குடமுழுக்கு நடத்தலாம் என்று தெளிவாகக் கூறுகிறது. இவை அனைத்திற்கும் சிவாச்சாரியார் கையொப்பமிட்டு உள்ளனர்!

சென்னை, மு.பெ. சத்தியவேல் முருகனார்.



✉ அரசுக்கு ஐந்து லட்சம் மிச்சப்படுத்திய வள்ளியப்பனை வணங்குகிறேன்.

மணப்பாறை, து. ஆனந்தி ராஜா

## சப்புக் கொட்டி ரசிக்கலாமா?

✉ 'சொல்ல மறந்த கதை' - திரைவிமர்சனம், இயக்குனர் தங்கர்பச்சனுக்கு ஊக்க மருந்தாக உதவும். நல்லவேளை இதற்குத் தடையேதுமில்லை.

திருநெல்வேலி-7, நெல்லை பகவதி



✉ இந்த வாரம் ஜோக்ஸ் ஸ்பெஷலா? எங்களை மகிழ்ச்சிக்கடலில் ஆழ்த்தி விட்டீரே!

சிதம்பரம் - 2, ஸ்ரீவித்யா காளிதாஸ்

✉ அண்ணாமலையார் கோயில் பிரச்னை அரசியலாக்கப்பட்டு, 'அரோஹரா'

போட வைத்து விடுமோ என அச்சம் எழுகிறது. தொல் பொருள் துறையினர் கூறும் பலன்கள் உண்மையிலேயே பக்தர்களுக்கு இடையூறாக மாறி விடாமலும், கோயில் ஆகம விதி வழிமுறைகளை மீறாமலும் இருக்குமாயின் நன்றே. பிரச்னை நீதிமன்றத்திற்குச் சென்றுள்ளதால் தற்போது நடுநிலை வகிப்பதே சரி!

தஞ்சாவூர்,
ஆடுதுறை ஜி. ராமதாஸ்

✉ அட்டைப் படக் கட்டுரை 'சர்வதேச சிம்மாசனம்' சபாஷ் போட வைத்தது.

பொறையாறு, புலவர் கணேசன்

✉ கையேந்தி பவன்களால் வரும் தீமைகளை மற்றவர்கள் பக்கம் பக்கமாக எழுதித் தள்ள, நீங்கள் சப்புக் கொட்டி ரசித்திருக்கிறீர்கள்.

சென்னை
கிருஷ்ண ராஜ்கோபால்

✉ பெட்டவாய்த்தலைக்கு அடுத்த சருகமணி கிராமத்தில் பிறந்து, தற்போது வேலையிலிருந்து ஓய்வு பெற்ற பின்பு திருச்சியில் இருக்கிறேன். ஈரோடு, கோவை செல்லும் போதெல்லாம் காவிரியின் நடுவிலுள்ள புதர்களைப் பார்க்கும் போது மனம் புழுங்கி நாமே அதை அழித்து விடலாமா என்று எண்ணியதுண்டு. ஆனால் அதை வள்ளியப்பன் தனி ஒருவராகச் செய்திருக்கிறார் என்று அறியும்போது, அவருக்கு என் வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நான் திருச்சியில் உயர்நிலைப் பள்ளியில் படித்தபோது அனைத்துப் பள்ளி மாணவர்களும் சேர்ந்து தெப்பக்குளத்தைத் தூர் வாரி சுத்தம் செய்தது நினைவிற்கு வருகிறது. அதுபோல காவிரியின் இரு கரைகளிலும் அமைந்துள்ள ஊர்களில் உள்ள பள்ளி மாணவர்களும், வேலை இல்லா இளைஞர்களும் வள்ளியப்பனைப் பின்பற்றினால் காவிரியன்னைக்கு நாம் நன்றி செலுத்தியவர்களாவோம்.

திருச்சி-3, எஸ்.கிருஷ்ணமூர்த்தி







✉ சத்யானந்தனின் 'அது போதும்' தலைப்பிலான கவிதை வரிகள் வறுமையின் பிடியில் அல்லல்படும் ஏழைச் சிறுவனின் அவல நிலையை வெகு யதார்த்தமாய் உணர்த்தியது.

போடிநாயக்கனூர்,
எஸ்.எம்.பாலசுப்ரமணியன்.

## மறுக்கிறார் வைகோ!



17.11.2002 கல்கி இதழில் 'காதில் விழுந்தவை' பகுதியில் 'கலைஞர் - வைகோ சந்திப்புக்கான முக்கியக் காரணம், வைகோவை ஜாமீனில் வெளி வரச் சொல்லி வற்புறுத்தத்தான் என்கிறார்கள். வைகோவின் துணைவியார் கலைஞர் அவர்களிடம் வேண்டுகோள் விடுத்ததால்தான் இந்தச் சந்திப்பு' எனப் பிரசுரிக்கப்பட்ட செய்தி முற்றிலும் உண்மைக்குப் புறம்பானது. கலைஞர் அவர்களை எனது துணைவியார் பார்க்கவே இல்லை. கலைஞரின் குடும்பத்தாரையும் சந்திக்கவும் இல்லை. திரு. முரசொலி மாறன் துணைவியாரிடம் 'அரசியல் எதுவும் பேசவும் இல்லை' எத்தகைய இடர்களும் துயரங்களும் எனக்கு ஏற்பட்ட போதும் எனது குடும்பத்தார் எந்தக் கட்டத்திலும் கவலைகளை எவரிடத்தும் வெளிப் படுத்தியது அறவே கிடையாது. எனது எண்ணமே அவர்களின் எண்ணம்.

வைகோ, பொடா சிறைவாசி,
வேலூர், மத்திய சிறை.

# பயத்தைக் கழற்றி வைத்தால்...

**'சமீபத்தில் வானதி பதிப்பகம் சுதா மூர்த்தியின் மூன்று நூல்களை வெளியிட்டது. வெளியீட்டு விழாவுக்காக சென்னை வந்திருந்தவரின் பயண அனுபவங்களைக் கேட்டோம். பயத்தைக் கழற்றி வைத்தால், சுவையான அனுபவங்கள் வாய்க்கும் என்கிறார்...**

புதிது புதிதான இடங்களுக்குப் பயணம் செய்வது எனக்கு எப்போதுமே பிடிக்கும். என் தாத்தா ஒரு சரித்திர ஆசிரியர். இந்திய சரித்திரம், புராதன இடங்கள் பற்றிக் கதை கதையாக நிறையக் கூறுவது வழக்கம். இப்படிக் கதை மூலம் அறிந்த இடங்களையெல்லாம் நேரில் சென்று பார்க்க வேண்டும், என்று என்னுள் ஒரு தாகம் இருந்து கொண்டே இருந்தது. ஆனால் என் அட்வென்சர் ஆசையை அன்று கடுமையாக நொந்து கொண்டேன்" என்று முதல் அமெரிக்கப் பயண அனுபவங்களை நினைவு கூர்கிறார் இன்போஸிஸ் பவுண்டேஷன் தலைவி சுதா நாராயணமூர்த்தி.

பயணம் என்று பேச ஆரம்பித்துவிட்டாலே அவரது கண்கள் ஆர்வத்துடன் மிளிர்கின்றன. அதுவும் அவரது முதல் அமெரிக்கப் பயணம், அவர் நினைவில் நிற்க ஒரு காரணம் உண்டு. இந்தப் பயணம் தான் சுதாவுக்குள் இருக்கும் எழுத்து ஆர்வத்தை அடையாளம் காட்டியது. 'From Beyond Atlantic' - முதல் பயணத் தொகுப்பு மட்டுமல்ல, முதல் புத்தகமும் கூட.

"அதற்கு முன்பெல்லாம் ஏதோ அங்கொன்றும் இங்கொன்றுமாக எழுதுவேனே தவிர, கோவையாக எழுத முடியும் என்ற நம்பிக்கை அளித்து, என்னை எழுத்தாளராக உருவாக்கியது இந்தப் புத்தகம்தான்" என்று உற்சாகமாகக் கூறுகிறார்.

அவர்களுக்குத் திருமணம் ஆன புதிது. கணவர் நாராயணமூர்த்தியோ வேலையில் எப்போதும் பிஸி. சுதாவுக்கு ஊரைச் சுற்றிப் பார்த்தாக வேண்டும்.

"நான் தனியாகவே அமெரிக்கா முழுவதும் சுற்றிப் பார்க்க அவர் தடையேதும் சொல்லவில்லை. அவருக்கும் டிராவல் செய்வது பிடிக்கும். ஆனால் அவருக்குச் சமயம் கிடைப்பதில்லையாகையால், என் பயண ஆசைகளுக்கு ஊக்கம் அளித்தார்.









# சுதா மூர்த்தி

'எங்கு வேணுமானாலும் போ. ஆனால் அவ்வப்போது ஒரு ஃபோன் செய்து உன் இருப்பிடத்தையும் நலத்தையும் மட்டும் தெரிவித்துவிடு' என்பதுதான் அவரது கண்டிஷன். நானும், கிடைத்த சந்தர்ப்பத்தை விடாமல், ஒரு டிபன் பாக்ஸில் புளியோதரை, தயிர் சாதம், ஒரு காமிரா, ஒரு பஸ் ரயில் கைடு, மற்றும் விதம் விதமாக வரைபடங்கள், என் டைரி சகிதம் முதுகில் ஒரு பையைச் சுமந்து கொண்டு கிளம்பி விடுவேன். கையில் அதிகம் பணம் இருக்காது. ஆங்காங்கே, நண்பர்கள் அல்லது உறவினர்கள் வீட்டில் தங்கி விடுவேன்''என்று உற்சாகத்துடன் ஆரம்பித்தார்.

''அன்றும் இப்படித்தான், என் நண்பர்கள் வீட்டில் சொல்லிவிட்டு நியூயார்க் பார்க்கப் புறப்பட்டேன். திரும்பும்போது வழியில் டிராபிக் ஜாம். அதனால் நான் சென்ற ரயில் ரூட் மாறிச் செல்ல ஆரம்பித்தவுடன் எனக்கு வழி புலப்படவில்லை. ரயில் நின்ற அடுத்த ஸ்டேஷனில், யாரிடமாவது வழி கேட்கலாம் என்று இறங்கிவிட்டேன். இறங்கியவுடன்தான் அந்த இடம் போதைப் பொருட்கள் அதிகம் புழங்கும் ஒரு புற நகர்ப் பகுதி என்று புரிந்தது. நல்ல குடும்பத்தில் வளர்ந்தவர்கள், அதுவும் பெண்கள் அந்தப் பகுதியின் பக்கமே செல்லமாட்டார்கள். என் தவறு புரிந்ததும், கிடைத்த அடுத்த ரயிலில் மறுபடி ஏறிவிட்டேன், அந்த இடத்திலிருந்து தப்பித்தால் போதும் என்று.

ரயில் போகப் போக, கம்பார்ட்மெண்ட் காலியாக ஆரம்பித்தது. இந்தச் சமயத்தில்தான் என்னை யாரோ கவனிப்பது போல் தோன்றிற்று. திரும்பினால், அந்த மனிதன் என்னையே கவனித்துக் கொண்டிருந்தான். நான் இடம் மாறினாலும், அவன் கூடவே நகர்ந்து உட்கார்ந்ததைக் கவனித்ததும் எனக்கு ஒரே உதறல். ஒரு வழியாக, அடுத்த ஸ்டேஷனில் ரயில் நின்றவுடன் கதவை நோக்கிப் பாய்ந்து இறங்கலானேன். கீழே இறங்கிய அடுத்த வினாடி அந்த மனிதன் என் கையைப் பிடித்தான். என் மூச்சு ஒரு நிமிடம் நின்று விட்டது. ஆனால் அவனோ, ''இதோ பாருங்கள் அம்மா... கொஞ்சம் போலீஸ் ஸ்டேஷனுக்கு என்னுடன் வாருங்கள்'' என்றான்.

நான் அவனைக் கேட்டேன் _ 'ஏன்? எதற்கு போலீஸ் ஸ்டேஷன்' என்று. அவன் என் பையைக் காண்பிக்கச் சொன்னான். கீழே




கொட்டித் தேடியதில் வெறும் காமிராவும், வரை படங்களும், என் டைரியும் மட்டும்தான். புளியோதரை, தயிர் சாதம் கூட மத்தியானமே காலியாகிவிட்டது.

''என்னது பையில் இவ்வளவுதானா?'' என்று அவனுக்கு ஆச்சரியம். நான் ஏறியதோ, போதைப் பொருட்களுக்குப் பெயர் போன ஓர் இடம். என் பையில் போதைப் பொருட்கள் வைத்திருக்கிறேன் என்று எண்ணிவிட்டார் அந்தப் போலீஸ் ஆபீஸர். போதாததற்கு நான் என் பையை வேறு பத்திரமாகப் பிடித்து வைத்திருந்தேன் (பின்னே... அதில் இருந்த கேமிராவும், சில டாலர்களும் எனக்குப் பொக்கிஷம். அவற்றைத் தவற விட முடியுமா என்ன..?)

பிறகு சினேகிதமாக அவர் சிரித்த வண்ணம், அந்த ஏரியாவில் தனியாக வந்த என் தைரியத்தைப் பாராட்டினார்."

''அமெரிக்காவின் புகழ் வாய்ந்த Grand Canyon என்கிற பள்ளத் தாக்குக்கு நான் சென்றதும் இது போன்ற ஒரு சாகசம்தான்.

இந்த மலையின் அடிவாரத்திற்கும் பள்ளத் தாக்கிற்கும் சுமார் எட்டு கிலோ மீட்டர் தூரம். என் நடையின் வேகத்தைக் கணக்கிட்டு நான் அடிவாரத்திற்குச் சென்று திரும்பவும் மேலே ஏற, சுமார் ஆறு மணி நேரம் ஆகும் என்று மனத்தில் கணக்கிட்டுவிட்டு, மத்தியான வாக்கில் தைரியமாக இறங்க ஆரம்பித்துவிட்டேன். கீழேயிருந்து பார்த்தால் தெரியும் காட்சி அற்புதம். 'மெக்கன்னாஸ் கோல்ட்' என்கிற ஆங்கிலப் படத்தில் வரும் காட்சியை மனத்தில் கற்பனை செய்தவாறு நடக்க ஆரம்பித்தேன். ஒருவர் மட்டுமே நடக்கக் கூடிய குறுகலான ஒற்றையடிப் பாதை. வழியில் தென்படும் கற்களிலெல்லாம் என்ன கனிமங்கள் இருக்குமோ' என்று என் இஞ்சினீயரிங் மூளை வேறு ஆராய்ச்சி செய்ய ஆரம்பித்துவிட்டது!

நான் அடிவாரம் போய்ச் சேரவே ஆறு மணி நேரம் பிடித்தது! இருட்ட ஆரம்பித்து விட்டது. கீழே சலசலவென்று ஓடும் ஓடை. ஒரு கல்லில் யோசனையோடு உட்கார்ந்து விட்டேன். இந்த இருட்டில், அந்த ஒற்றையடிப் பாதையில், மறுபுறம் கொஞ்சம் தவறினால் அதல பாதாளத்தில் உருள வேண்டியதுதான் _ எப்படி மேலே போய்ச் சேருவேன்? அந்த ஆளில்லாக் காட்டில் கற்களின் நடுவே உட்கார்ந்து இரவைக் கழிக்க வேண்டியதுதான். பயம் முதுகுத்தண்டில் சில்லென்றது. இப்படியே இறந்து போனால், என் கணவருக்குத் தெரியக் கூட வாய்ப்பு இல்லை. அப்போதெல்லாம் செல்ஃபோன் கிடையாது. இந்தியாவில் உள்ள என் பெற்றோரைப் பார்க்காமலேயே இறந்துவிடுவேனோ என்று வேறு கவலை. இன்னொரு புறம் பசி வயிற்றைக் கிள்ளியது. இன்று பலர் பல மேடைகளில் பசி, பட்டினி, ஏழ்மை என்று பேசுவதைக் கேட்கும்போது, பசி என்றால் என்னவென்று அனுபவிக்க உதவிய இந்தச் சம்பவம் என் நினைவுக்கு வரும்.

இப்படி முட்டாள் தனமாக மாட்டிக் கொண்டோமே என்று வருந்தினேன். சுற்றிலும் ஆள் அரவமே கிடையாது. வழியில் ஒரு ஸ்பானிஷ் தம்பதி ஒரு குதிரைக் குட்டியுடன் மெள்ள ஏறுவதை கவனித்திருந்தேன். அவ்வளவுதான். அதை அப்போது அதிகம் கண்டு கொள்ளவில்லை. இந்தச் சமயத்தில், இரண்டு இளைஞர்கள் ஓடையிலிருந்து ஒரு படகில் இறங்கி கற்களின் நடுவே டெண்ட் அடிக்க ஆரம்பித்தார்கள். அவர்கள் ஏதாவது உதவி வேண்டுமா என்று என்னிடம் கேட்ட போது, மையமாக ஒரு அசட்டுச் சிரிப்பு சிரித்து வைத்தேன். ஏதோ துணை கிடைத்ததேயென்றாலும், அந்த இளைஞர்களிடம் எப்படி உதவி கேட்பேன்?

இந்தச் சமயத்தில்தான் நான் வழியில் பார்த்த ஸ்பானிஷ் தம்பதி ஒருவாறாக வந்து சேர்ந்தனர். அவர்களும் டெண்ட் அடிக்க ஆரம்பித்தபோது, நான் வலியச் சென்று உதவ ஆரம்பித்தேன். பின்னர் அவர்கள் ஸ்பானிஷ் மொழியில் உள்ளே அழைத்தபோது, மொழி புரியாவிட்டாலும் அவர்களது சினேகித பாவனை புரிந்தது. உடனேயே அவர்களுடைய டெண்டில் இரவைக் கழிக்க அனுமதி வேண்டும் என்று கேட்டுக் கொண்டேன்.

காலையில் எழுந்து மடமடவென்று மேலே ஏறி என் கணவருக்கு போன் போட்டதுதான் தாமதம். விடுவிடுவென்று கோபித்துக் கொள்ள ஆரம்பித்தார். இருக்காதா பின்னே? ஊர் சுற்றிப் பார்க்கப் போன மனைவியை நான் முழுக்கக் காணவில்லை என்றால்...!"

சந்திப்பு, தொகுப்பு :

**அருணா ஸ்ரீநிவாஸன்**

அட்டை, வண்ணப்படங்கள் : **ஸ்ரீஹரி**

# வலை வீசி,

**ஆண்டு முழுவதுமே இசை விழா கொண்டாடும் கர்னாடக சங்கீத வலைத் தளங்கள் டிசம்பர் மாதம் வந்தால் போட்டி போட்டுக் கொண்டு பம்பரமாகச் சுழல்கின்றன. இவ்வாண்டுக்கான தயாரிப்புகள்...**

'கர்னாடிக் மியூசிக் டாட் காம்' வலைத்தளத்துக்குப் பொறுப்பாக இருப்பவர் 'சிஃபி'யைச் சேர்ந்த பூர்ணா வைத்தியநாதன்.

டிசம்பர் சீஸனில் எந்தெந்தக் கச்சேரிகள் எங்கே நடக்கின்றன என்பதிலிருந்து இசை விமர்சனங்கள், பேட்டிகள் என்று பலவித விவரங்களைத் தங்களது வலைத்தளத்தில் கொடுப்பது இவர் பொறுப்பு. தேதிவாரியாக, கலைஞர் வாரியாக, பக்க வாத்தியக் காரர்கள் வாரியாக என்று விதவிதமான அட்டவணைகள் தயாராகுமாம்.



• பூர்ணா வைத்தியநாதன்

லால்குடி ஜெயராமன், திருச்சி சங்கரன், கௌரி ராம்நாராயண், மைத்ரேயி ராமதுரை, விஜய் சிவா என்று ஐடியாக்களை அள்ளித் தரும் ஆலோசனைக் குழுவே இருக்கிறது இந்த வலைத் தளத்துக்கு. "ஒரு நாளில் இருமுறை 'அப்டேட்' செய்யப்படும் எங்கள் வலைத் தளத்தை சீசனின்போது பலமுறை அப்டேட் செய்தாக வேண்டும். இதற்கேற்றபடி நான் திட்டமிட்டு இயங்க வேண்டும்" என்கிறார் பூர்ணா.

பூர்ணா வயலின் கலைஞர்; கணவர் வைத்தியநாதன் மிருதங்கக் கலைஞர். எனவே கர்னாடிக் மியூசிக் டாட் காம் செயல்பாடுகளோடு தங்கள் கச்சேரி அட்டவணையையும் கவனமாய்ப் பின்பற்றும் பொறுப்பு பூர்ணாவுக்கு.

"கடுமையான பயிற்சிக்கு நேரம் ஒதுக்குவதுடன், கணவர் வாசிக்கும் கச்சேரிகளில் ஆஜராவதற்கு ஏற்றபடி என் பணிகளைத் திட்டமிட்டாக வேண்டும். அத்துடன் என் சகோதரர்கள் (விஜய் சிவா, மனோஜ் சிவா) மேடையேறும் நிகழ்ச்சிகளுக்கும் போக வேண்டும். இதனால் வேறு பலரது நிகழ்ச்சிகளுக்குச் செல்ல முடியாது போகக்கூடும்....

நவம்பர் மாதக் கடைசியிலேயே -இசை நிகழ்ச்சிகளுக்கு அணிய வேண்டிய உடைகளை எடுத்து லாண்டரிக்கு அனுப்பித் தயார் நிலையில் வைத்துவிடுவோம். (முக்கியமாக, ரசனையான டிசைன்கள் கொண்டு குர்த்தாக்களை அணிந்து என் கணவர் மேடையில் தோன்று




# தயாராகிறார்கள்

# கலைபரப்பி...

வதில் எனக்கு அதிக ஆனந்தம்.)

சீஸன் தொடங்குவதற்கு முன்பே எங்கள் காரையும் பைக்கையும், ஒரு முழு சர்வீஸ் செய்து சரி செய்து கொள்வோம்.

டி.வி., சினிமா, மற்ற பொது நிகழ்ச்சிகள் எல்லாமே டிசம்பர் மாதத்தில் பின்னுக்குப் போய் விடும்'' என்கிறார் பூர்ணா வைத்யநாதன்.

'சங்கீதம் டாட் காம்' என்ற வலைத் தளத்தை கடந்த மூன்று வருடங்களாக நடத்தி வருகிறார்கள் இசைக் கலைஞர் சஞ்சய் சுப்ரமணியமும், ஸ்ரீராமும்.

"எங்கள் வலைத் தளத்தில் ஒரு சிறப்பு உண்டு. இசை விழா சீஸனில் ஒரு குறிப்பிட்ட நாளில் உங்களுக்குப் பிடித்த இசைக்கலைஞர் ஒருவர் பாடுவதாக அட்டவணையில் இருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். அந்தப் பாடகரின் பெயரை க்ளிக் செய்தால், இந்த சீசனில் வேறெங்கெங்கு, எந்தெந்த நாட்களில் அவர் பாடவிருக்கிறார் என்பது தெரிந்துவிடும். இதை 'லிங்க்ட் ஷெட்யூல்' என்கிறோம். 'சீஸன் டாக்' என்ற பகுதியில் இசை விழாவின் போது நடைபெறும் நிகழ்ச்சிகள் குறித்து, வலைப் பார்வையாளர்கள் ஒருவருக்கொருவர் கருத்து பரிமாறிக் கொள்ளலாம். 'ஃபோரம்'

• ஸ்ரீராம்

• சஞ்சய்

www.kutcheribuzz.com
Kutcheri
Sikkil Sisters &
Sangita Kalanidhi
DECEMBER 2002
SEASON GUIDE
10% OFF
on all Audio Cassettes / CDs / VCDs
• Open on Sundays • Spacious Parking
• All Major Credit Cards accepted

என்ற பகுதியில் பல்வேறு சபாக்கள், அவற்றின் அருகில் உள்ள ரெஸ்டாரண்டுகள் போன்ற பிற விவரங்கள், வெவ்வேறு அரங்கங்களில் அமரக் கூடிய பார்வையாளர்களின் எண்ணிக்கை போன்ற தகவல்களை அளிக்கிறோம்.

மிகவும் பிரபலமான இருபது வாய்ப்பாட்டுக்காரர்கள் மற்றும் பக்கவாத்தியக்காரர்கள் குறித்து, பலப்பல விவரங்களை எங்கள் வலைத்தளத்தில் அளிக்கிறோம். மிக அதிகமான இசைக் கட்டுரைகளையும் டிசம்பர் சீசனில் தருகிறோம்'' என்றார் சஞ்சய் சுப்ரமணியம்.

''கச்சேரி டாட்.காம்' வலைத் தளத்தின் பின்னணியில் இருப்பது வின்சன்ட் டிசௌசா. ('மைலாப்பூர் டைம்ஸ்' என்ற பிரபல உள்ளூர் இதழின் இயக்குனரும் இவர்தான்). ''டிசம்பர் சீஸன் வந்தாலே, நிறைய வேலை பிழிந்தெடுக்கும். நவம்பர் மாதத்திலிருந்தே இதற்கான முன்னேற்பாடுகளைச் செய்து கொள்வோம். பல வெளி நாட்டு ரசிகர்கள் இசை விழாவில் தங்களுக்குப் பிடித்த சில நிகழ்ச்சிகளை நேரில் கண்டு ரசிக்க, சென்னைக்கு வர வேண்டும் என்று துடித்துக் கொண்டிருப்பார்கள். அவர்களுக்கு எங்களுடைய வலைத்தளம் மிகவும் பயனுள்ளதாக இருக்கும். ஆனால் இந்த வருடம் சோதனையாக பல சபாக்கள் தங்கள் நிகழ்ச்சி நிரல்களைத் துல்லியமாக ஒரு மாதம் முன்புகூட வடிவமைக்கவில்லை. எனவே தங்கள் இந்திய விஜயத்தை முன்னதாகவே திட்டமிடுபவர்களுக்கு இதனால் கஷ்டம் தான்.

''மன்னா! உங்களுக்குச் சர்க்கரை வியாதி உள்ள செய்தி எப்படியோ எதிரி நாட்டவர்களுக்குத் தெரிந்து விட்டது போலும்...''

''எதை வைத்துச் சொல்லுகிறீர், மந்திரி?''

''இப்பொழுது அனுப்பும் ஓலைகளிலெல்லாம் சர்க்கரை வர்த்தி அவர்களுக்கு என்று நக்கலாய் எழுதுகிறார்கள்.

\- வி. சகிதா முருகன்



எங்கள் வலைத்தளத்திலிருந்து சில பகுதிகளை 'கச்சேரி பஸ்' என்ற பெயரில் தினசரியாக டிசம்பர் சீசனில் வெளியிடுகிறோம். இப்போது அது இசை ரசிகர்களிடையே பிரபலமாகிவிட்டது. மாலை ஐந்திலிருந்து ஐந்தரைக்குள் பல்வேறு சபாக்களில் இந்த இலவச இதழை வினியோகிக்கிறோம். இது வந்து சேருவதற்காகவே காத்திருக்கும் ரசிகர்கள் கூட இப்போது இருக்கிறார்கள். தொடக்கத்தில், மியூசிக் அகாடமியில் இந்த நாளிதழ் வினியோகத்தை அனுமதிக்க மறுத்தார்கள். ஏனென்றால் அரங்கிற்குள் கச்சேரி நடந்து கொண்டிருந்தபோதே சிலர் இதைப் படித்துக் கொண்டிருந்ததுதான். ஆனால் இசை தொடர்பான பல விஷயங்களை (அடுத்த நாள் திடீரென ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும் இசை நிகழ்ச்சிகள் மற்றும் விஐபி விருந்தினர்கள் குறித்த தகவல்கள் உட்பட) இதில் தெரிந்து கொள்ள முடியும் என்பதை அறிந்து கொண்டபிறகு, அனுமதித்து விட்டார்கள்.

நிகழ்ச்சி நிரல்களையும், விருது பெற்றவர்களைப் பற்றியும் எங்கள் வலைத்தளத்தில் அறிவிப்பதோடு, வெளிநாடு மற்றும் வெளி மாநிலங்களிலிருந்து வருபவர்களுக்கு உதவும் வகையில், முக்கிய சபாக்களுக்கு அருகில் உள்ள எந்தெந்த ஹோட்டல்களில் எவ்வளவு அறைகள் காலியாக உள்ளன என்பதை அறிவிக்கிறோம். சில வீடுகளில் ''பேயிங் கெஸ்ட்''களை அனுமதிப்பார்கள். அவர்களைக் குறித்தத் தகவல்களையும் தருகிறோம்.

எங்கள் வலைத்தளத்தில் நிறையப் புகைப்படங்கள் இடம்பெறுமாறு பார்த்துக் கொள்கிறோம். இசைவிழாவின்போது மேலும் அதிகப் புகைப்படங்கள்! உதாரணமாக, இந்த வருடம் சங்கீத கலாநிதி பட்டம் பெற்றுள்ள சிக்கில் சகோதரிகளின் பேட்டியோடு அவர்களது தற்போதைய மட்டுமல்லாது, சிறு வயதுப் புகைப்படங்களையும் காண முடியும்'' என்கிறார் வின்சென்ட் டிசௌஸா.

— ஜி.எஸ்.எஸ்.






• கண்ணன்

# சங்கீத கோனார் நோட்ஸ்!

எந்தெந்த சபா எங்கெங்கே விழா நடத்துகிறது; யார் யாரெல்லாம் பாடுகிறார்கள்; எந்தக் கிழமை, எந்தத் தேதியில், பாடுகிறார்கள் என்று ஒரு கையடக்கக் கையேடு சுமார் பன்னிரண்டு வருடங்களாக ரசிகர்களுக்கு இலவசமாக வழங்கப்பட்டு வருகிறது.

இந்த 'கைடு', கோனார் நோட்ஸ் அளவுக்கு இப்போது புகழ் பெற்று, எப்போது வரும், என்றைக்குக் கிடைக்கும் என்று எல்லோரும் பரபரப்பாக விசாரிக்கும் அளவுக்கு வந்து விட்டது!

இதைத் தயாரிக்கும் கண்ணன், வங்கி ஊழியர். இதை வெளியிடுபவர் நல்லி குப்புசாமி செட்டியார்.

''எல்லா வருடமும் போல, இந்த வருடமும் கடைசி நிமிடத்தில் தான் புத்தகம் வெளியாகும். இதுவரை பதினேழு அமைப்புகள் மட்டும்தான் கச்சேரி விவரங்கள் தந்திருக்கின்றன. இன்னும் சுமார் பதினைந்து அமைப்புகள் தர வேண்டும். பக்கவாத்தியக் கலைஞர்கள் யார் யார் என்பது முடிவாகி இருக்காது. அன்றன்றைக்கு வரும் தகவல்களைத் தொகுத்து, அவ்வப்போதே கம்ப்யூட்டரில் தேதி வாரியாக வரிசைப்படுத்திக் கொடுத்து விட்டேன். சில பக்க வாத்தியங்கள் நிச்சயிக்கப்படாமல், கடைசி வரை தகவல் கிடைக்காத பட்சத்தில், ஒரு கோடு போட்டு விட வேண்டியதுதான்!

"முன்பெல்லாம் டிசம்பர் முதல் வாரத்தில் கச்சேரி விவரங்கள் தினசரிகளில் விளம்பரங்களாக வந்து விடும். கச்சேரிகள் டிசம்பர் 15ம் தேதிக்குப் பிறகே ஆரம்பிக்கும். அதனால் சீஸன் தொடங்குகிற சமயத்தில் விநியோகிக்க முடிந்தது. இப்போது டிசம்பர் முதல் தேதியிலேயே பல சபாக்கள் இசை விழாவைத் தொடங்கிவிடுகின்றன. எந்த அமைப்பின் நிகழ்ச்சிகளையும் விட்டு விடக்கூடாது என்பதில் அக்கறை எடுத்துக் கொண்டு செயல்படுவதால், கடைசி நிமிடம் வரை தாமதம் ஆகிறது!" என்கிறார் கண்ணன்.

கர்நாடக இசைப் பாடலின் ஆரம்பவரி, அதன் ராகம், பாடலை எழுதியவரின் பெயர் என்றும் ஒரு கையடக்கக் கையேட்டை இவர் தொகுக்க, நல்லி வெளியிட்டிருக்கிறார்.

கையடக்கக் கையேடு தயாராகி, அச்சக 'பில்' வந்த மறு நிமிடமே 'நல்லி'யிடமிருந்து நேரடியாக ஒரு காசோலை அச்சகத்துக்கு அனுப்பப்பட்டு விடுகிறது.

— சாருகேசி




தயாராகிறார்கள்






# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
- பாரதியார்.

## அமெரிக்க நன்கொடை; சங்க் பரிவார் வன்கொடை!

சவப்பெட்டி ஊழல், பெட்ரோலியப் பொருட்கள் விற்பனை உரிமை வழங்குவதில் ஊழல் என்று சமீபத்தில் கிளம்பிய ஊழல் புயல்களெல்லாம் ஒன்றுமில்லை என்னும் அளவுக்குக் கிளம்பியிருக்கிறது ஒரு சூறாவளி.

அமெரிக்காவில் இயங்கும் சங்க் பரிவார் கிளை, **Indian Development and Relief Fund** (ஐ.டி.ஆர்.எஃப்) என்ற நிதி திரட்டும் பிரிவு ஒன்றை ஏற்படுத்தி, மில்லியன் கணக்கான டாலர்கள் பண உதவி பெற்று வரு கிறது. உலகின் முன்னணி நிறுவனங்கள், இவ்வமைப்புக்குத் தயக்கமோ யோசனையோ இன்றி பணம் கொடுத்து வந்திருக்கின்றன. உலகளாவிய சாஃப்ட்வேர் நிறுவனமான சிஸ்கோ சிஸ்டம்ஸ், ஓர் ஆண்டில் மட்டும் 70,000 டாலர் நன்கொடை வழங்கியிருக்கிறது.

இத்தகைய நிறுவனங்களில் பணியாற்றும் ஊழியர்களுள் பெரும்பாலோர் இந்தியர்களாக



2002 டிசம்பர் 1
சித்ரபானு கார்த்திகை 15
மலர் : 61
இதழ் : 18




அமைந்து விடுகிறார்கள். அவர்கள் தனிப்பட்ட முறையில் ஐ.டி.ஆர்.எஃப் அமைப்புக்கு நன்கொடை வழங்க, அந்த 'நல்ல காரியத்தை' ஆதரிக்கும் வகையில் அவர்களது முதலாளிகளும் நிறுவனத்தின் பங்களிப்பாக அதே அளவு நன்கொடையைத் தருகிறார்கள். இவ்வகையில் சேகரமாகும் தொகை, இந்திய அபிவிருத்திக்கோ நிவாரணப் பணிகளுக்கோ செலவாகிறதா என்றால், அதுதான் இல்லை!

சங்க் பரிவாரின் இதர பல கிளை அமைப்புகளுக்கு இப் பணம் வினியோகமாகி, நமது நாடெங்கும் வெறுப்பு பிரசாரத்துக்கும், ஹிந்துக்கள் அல்லாதாரைக் குறிவைக்கும் வன்முறைக்கும் பெரும்பாலும் பயன்படுத்தப்படுகிறது.

இந்த உண்மையை ஆதாரங்களுடன் வெளியிட்டிருக்கிறார் அமெரிக்க ரைடர் பல்கலைக் கழகத்தின் பேராசிரியர் பிஜூ மாத்யூ. வெறுப்புப் பிரசாரத்துக்கு நிதி உதவுதலை நிறுத்த ஒரு மாற்று இயக்கமே ஆரம்பித்துள்ளார் பேராசிரியர் மாத்யூ. அந்த அளவுக்குப் பிரச்னை புரையோடியிருக்கிறது.

சிஸ்கோ தவிர, சன் கம்ப்யூட்டர்ஸ், ஆரகிள், ஹியூலெட் பாக்கார்ட் போன்ற நிறுவனங்களும் ஐ.டி.ஆர்.எஃப்புக்கு நிதி உதவி வருகின்றன. ஆனால் தாங்கள் வழங்கும் பணம் மதக் கலவரங்களைத் தூண்டவும் சிறுபான்மையினருக்கு எதிரான இயக்கங்களை நடத்தவும் பயனாகிறது என்பதை இவர்கள் உணரவில்லை.

இந்தத் திட்டமிட்ட பண சேகரிப்பு, சங்க் பரிவாரின் விபரீத செயல்திட்டத்தில் ஓர் அம்சமாக நீண்ட நெடு நாட்களாக நடந்து வந்திருக்கிறது.

சங்க் பரிவாருடன் நெருங்கிய தொடர்புள்ள பாரதிய ஜனதா கட்சியும் அதன் தலைமையில் அமைந்துள்ள மத்திய அரசும் இது குறித்துத் தங்களுக்கு எதுவுமே தெரியாது என்று சொல்லி ஒதுங்கிக் கொள்ளுமானால் அது முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைக்கும் கேவலம்தான்.

ஆர்.எஸ்.எஸ்.ஸின் கட்டுப்பாட்டில் உள்ள பல அமைப்புகள் ஐ.டி.ஆர்.எஃப் நிதி பெற்று வருகின்றன. பிரதமரும் துணைப் பிரதமரும் அமெரிக்கா சென்ற போது, அவர்களுக்கு




அமோக வரவேற்பு அளித்தது ஹிந்து ஸ்வயம் ஸேவக் சங் அமைப்பு. இவ்வமைப்பின் முக்கியப் புள்ளிகளான ஜதீந்தர் குமார், ராம் கெஹானி ஆகியோர்தான் ஐ.டி.ஆர். எஃப்பின் ஸ்தாபக உறுப்பினர்கள்.

வெளிநாட்டு நிறுவனங்களிடமிருந்து அந்நியச் செலாவணி நன்கொடை பெற்று, அதை இங்கே சகோதர இந்தியர்களுக்கு எதிரான அழிவுத் திட்டங்களுக்கு உபயோகிக்கும் கொடுமையை இதுநாள் வரை கண்டுகொள்ளாமல் இருந்ததற்காக பி.ஜே.பி.யையும் பிரதமரையும் துணைப் பிரதமரையும் மன்னிப்பது சாத்தியமில்லை.

இந்த விவகாரத்தை எதிர்க்கட்சிகளும் நிச்சயமாக இதோடு விடப் போவதில்லை. நாடாளுமன்றத் தேர்தல் நெருங்கி வருவதற்குள் இன்னும் பல விவரங்கள் வெளிச்சத்துக்கு வந்து பி.ஜே.பியின் அரசியல் எதிர்காலத்தையே கேள்விக்குறியாக்கத்தான் செய்யும்.

அந்த விபரீதத்திலிருந்து கட்சியைக் காப்பாற்ற ஒரே ஒரு வழிதான் இருக்கிறது.

இதுவரை நடந்த தவறுகளுக்குப் பகிரங்கமாக மன்னிப்பு கேட்பதுடன் இனி வி.எச்.பி., ஆர்.எஸ்.எஸ்., பஜ்ரங் தள், போன்ற சங்க் பரிவார் அமைப்புகளுக்கும் அரசியல் கட்சியான பி.ஜே.பி.க்கும் எந்தத் தொடர்பும் இல்லை என்று அறிவித்து, தொடர்புகளை முற்றிலும் துண்டிக்க வேண்டும்.

இது நாள் வரை இந்த ஹிந்து அடிப்படைவாத ஸ்தாபனங்களின் ஆள் பலமும் அமைப்பு பலமும்தான் பி.ஜே.பிக்கு உதவுவதாக நாம் எண்ணினோம். அயல்நாட்டிலிருந்து பெற்ற நிதியுதவியும் கட்சிக்குக் கை கொடுத்திருக்கக் கூடும் என்று இப்போது நினைக்கத் தோன்றுகிறது.

அவ்வாறு இல்லை எனில் அதை நிரூபிக்கும் விதமாக பி.ஜே.பி. தலைமையிலான மத்திய அரசு தக்க நடவடிக்கைகளைப் பகிரங்கமாக எடுத்து, வெறுப்பும் வன்முறையும் வளர்க்கப் பயன்படுகிற இந்த வன்கொடுமைகளுக்குத் தடை விதித்து, ஏற்கெனவே வந்துள்ள நன்கொடைகளையும் பறிமுதல் செய்யட்டும்! ○

# புத்தம் புதுசு!

**சரணாகதி :** ரமண மஹரிஷி போற்றிப் பாடல்கள். இயற்றியவர்கள் பலர்; இசை : சுரேஷ் கைலாஷ்; பாடியிருப்பவர் .... மயக்கும் குரலில் மசாலா பாடல்கள் வழங்கிப் பெயர் பெற்ற மால்குடி சுபா! இதயத்தின் ஆழத்திலிருந்து பாடியிருக்கிறார்.




**வெளியீடு :** மால்குடி சுபா, 1பி, பிளாக் மூன்று, தரங்கிணி, 12, மூன்றாவது சீவார்ட் சாலை, வால்மீகி நகர், சென்னை - 600041. விலை ரூ.30/-

**சௌபாக்யா ஸ்ரீ டேபிள் டாப் கம் டில்ட்டிங் வெட் கிரைன்டர் :** ஐ.எஸ்.ஓ. 9002 உலகத் தரச் சான்றிதழ் பெற்ற முதல் வெட் கிரைண்டர் நிறுவனத்திடமிருந்து இன்னொரு வெளியீடு. வெள்ளை, செர்ரி ரெட் என இரு வண்ணங்களில் கிடைக்கிறது. இரண்டு வருட உத்தரவாதம். அயல் நாட்டு உபயோகத்துக்கென 110 வோல்ட் மோட்டார் பொருத்திய மாடலும் உண்டு. தென்னிந்தியாவில் 600 கடைகளில் கிடைக்கும்.

**அலுவலகம் :** 32ஏ, வடக்கு உஸ்மான் சாலை, தி.நகர், சென்னை - 600 017. விலை ரூ.3650/-




**பாய்ண்ட் ஈஸி கிரைன்ட் :** டேபிள் டாப் கிரைன்டர்.




இரண்டு லிட்டர், இரண்டு வருட உத்தரவாதம். தண்ணீர் பம்ப்கள் தயாரிப்பில் நீண்ட நெடும் அனுபவமுள்ள ஷார்ப் நிறுவனத்தின் தயாரிப்பு. எச்.டி.பிளஸ் என்ற புதிய தொழில் நுட்பம் பயன்படுத்தித் தயாரிக்கப்படுகிறது.

**உற்பத்தி :** ஷார்ப் நகர், காலாபட்டி, கோவை - 641 035. விலை ரூ.4290/-

**ஜகத் ஜனனி :** தாரா நடராஜன் இசையோடு இயற்றிய பாடல்களை சிரத்தையாகப் பாடியிருக்கிறார் சௌம்யா. பாரம்பர்ய பாணி. பக்தி கலந்த இசை. எம்பார் கண்ணன் வயலின், நெய்வேலி நாராயணன் ம்ருதங்கம்.




**வெளியீடு :** கர்நாடிகா, 4, பத்மநாப நகர் மூன்றாவது குறுக்குத் தெரு, சென்னை - 20. விலை ரூ.60/-

# கைராசிக்காரி

வெரகடலை
உடைத்து உடைத்து
கொப்பளித்துப்போகும்
கையிரண்டும்

ஏர்பின்னால
நடந்து நடந்து
கடலரிசி போட்டகையால்
கஞ்சி குடிக்க முடியாது

கடலக் கொல்லையில்
களக்கொட்டு போட்டுழுது
காச்சுப் போகும்
கையும் முதுகும்

சேற்றுவயலில்
நடவுநட்டு
விண்ணு விண்ணுன்னு
தெறிக்கும் விரல்நகம்

களத்துமேட்டில் காத்துவீசாம
முறம்புடிச்ச கையின்
மூட்டு இறங்கி
புறடி வலிக்கும்

'கைராசிக்காரி'ன்னு
எல்லோரும் கூப்பிடுறாங்க
கைப்பிடித்த கணவன்
கைவிட்டுப் போனது மட்டும்
என்ன ராசியோ?



சிவராஜ்



# பொம்பளை சிவாஜி!

இலங்கை வானொலி நேயர்களுக்கு இராஜேஸ்வரி சண்முகம் என்கிற பெயர் மிகவும் பரிச்சயமானது. இவர் தமது பதிமூன்றாவது வயதில் பகுதி நேர அறிவிப்பாளராகத் தடம் பதித்து, கடந்த ஐம்பதாண்டுகளாக நிகழ்ச்சித் தொகுப்பாளராக, அறிவிப்பாளராக தூய தமிழில் தமது கணீர் குரலால் உலகெங்கிலும் உள்ள தமிழர்களின் நெஞ்சங்களில் தடம்பதித்து வருகிறார்.

சமீபத்தில் திருச்சி வந்திருந்தவரைச் சந்தித்தோம்.

**தமிழைக் கடித்துக் குதறும் தொலைக் காட்சி அறிவிப்பாளப் பெண்மணிகள் உச்சரிப்பு பற்றி...**

தமிழைத் தமிழாக உச்சரித்தால்தான் அழகு. எனக்குத் தமிழ் கற்றுத் தந்த ஆசான்கள், எப்படித் தமிழை உச்சரிக்க வேண்டுமென அன்று சொல்லித் தந்தார்களோ, அதேபோல்தான் இன்று வரை உச்சரித்து வருகிறேன். உச்சரிப்பு, உச்சரிப்பு என்று நச்சரித்து, நச்சரித்து அடிக்கடி எச்சரித்தால் தமிழைக் கடித்துக் குதறித் துப்புவோர்கூட, தப்பாமல் தமிழ் பேச முன் வரக்கூடும். முயன்று பாருங்கள், தமிழ் வாழ வேண்டும்."

**தனியார் சேனல்களின் வளர்ச்சியினால், வானொலி நேயர்களின் எண்ணிக்கை குறைந்துள்ளதா?**

தொலைக்காட்சி சேனல்களின் வளர்ச்சியினால் வானொலி நேயர்களின் எண்ணிக்கை குறைந்துள்ளது போல ஒரு பிரமை நிலவி வருகின்றது. இருப்பினும், நாளுக்கு நாள் புதிய புதிய நேயர்கள் எமக்குக் கடிதங்கள் எழுதுவதைப் பார்க்கும்போது, ஒருவர் குறைந்தாலும் இன்னொருவர் நேயராக இணைகிறார் என்றே எண்ணத் தோன்றுகிறது.

**உங்கள் ரசிக நேயர்கள் பற்றிச் சொல்லுங்க?**

என்னைக் காணாமலேயே என் குரலை மட்டும் கேட்டு ரசித்த வானொலி நேயர்கள், என்னை நேரில் பார்த்து மகிழ்ந்த சம்பவங்களும், நெகிழ்ந்த சம்பவங்களும் தொடர்ந்து கொண்டேதான் இருக்கின்றன. குறிப்பாக நடிகர் திலகம் சிவாஜி கணேசனை நேரில் சந்தித்த அனுபவம். ''இலங்கை வானொலியில் நீதான் பொம்பளை சிவாஜியாமே?'' என்று அவர் என்னைக் கேட்டது மறக்க முடியாது.

**உங்கள் சக ஊழியராக இருந்த அப்துல் ஹமீது போல, வானொலியை விட்டு வெளி வந்து பிரகாசிக்க வேண்டும் என்கிற எண்ணம் ஏதேனும்...**

வானொலியோடு தொடர்பு வைத்துக் கொண்டே ரசிகர்களால் வரவேற்கப்படும் பிற துறைகளில் ஜொலிக்க வேண்டும் என்று நினைக்கிறேன். வாய்ப்புகள் வரும்போது நிச்சயம் பயன்படுத்திக் கொள்வேன். இன்று பிரபலமாக இருக்கும் 'பாட்டுக்குப் பாட்டு' நிகழ்ச்சி நாங்கள் இருவரும் அன்றைய நாட்களில் தொகுத்தளித்து புகழ் சேர்த்த நிகழ்ச்சி என்பதில் பெருமிதம் உண்டு.

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

டாக்டர் எல். மகாதேவன்

# ஆயுர்வேதம் சுத்த சைவமா?

தன்வந்தரி மந்திரம் பற்றிக் கேட்டிருக்கிறார் அரூர் வாசகி சூடாமணி. இந்த வாரம் அதிலிருந்து ஆரம்பிக்கிறேன்.

**தன்வந்தரி மந்திரம்**

*ஓம் நமோ பகவதே*
*வாசுதேவாய தன்வந்த ரயே*
*அமிர்த கலச ஹஸ்தாய*
*சர்வாமய விநாசனாய*
*த்ரைலோக்ய நாதாய*
*ஸ்ரீ மஹா விஷ்ணவே... ஸ்வாஹா!*

இது நோய்க்கு நிவார்ணம் தரும் மந்திரம். மருந்து உட்கொள்ளும் சமயம் இதை மனமுருக ஜபித்து வந்தால், நோய் குணமாகும் என்பது நம்பிக்கை.

'வாசுதேவராக, அமிர்த கலசத்தைக் கையில் ஏந்தியவரும் எல்லா நோய்களையும் தீர்க்க வல்லவரும், மூன்று உலகங்களுக்கு அதிபதியும், மஹாவிஷ்ணுவின் ஸ்வரூபமுமாகிய தன்வந்தரியை, ரோக நிவாரணத்தின் பொருட்டு, நான் வணங்குகிறேன்!

இந்த மந்திரத்தைச் சொல்ல இயலாதவர்கள், 'அச்சுத, அனந்த, கோவிந்த' என்று சொன்னாலே போதும்.

வேதத்தில் கூட 'பிரதமோ தைவ்யோ பிஷக்' என்றுதான் சொல்லியிருக்கிறது. 'இறைவனே முதன்மை வைத்தியன்' என்று பொருள். வைஷ்ணவ சம்பிரதாயத்தில் கூட 'வைத்யோ நாராயணோ ஹரி' – 'வைத்தியன் நாராயணனே!' என்று சொல்லப்பட்டிருக்கிறது.

''இறைவா... இந்த நோயைக் களையக் கூடிய வல்லமை உனக்கு மட்டுமே உள்ளது. என்னுடைய திறமையோ, மருந்துகளின் தன்மையோ இரண்டாம் பட்சமே..'' என்று உணர்ந்து, மருத்துவர்கள் வைத்தியம் பார்க்க வேண்டும். இந்த எண்ணம் உண்டானால், வைத்தியருக்கே 'அந்தக் கரண சுத்தி' உண்டாகும். 'எல்லாம் இறைவன் அருளே' என்று நோயாளியும் உணர்ந்து நடந்தால், நோயாளிக்கும் சுகம் உண்டாகும்.

உணர்ந்து, அனுபவித்து, இறை உணர்வோடு மருந்து சாப்பிடுங்கள். நிச்சயம் குணமடைவீர்கள்.



* ஸ்ரீ தன்வந்தரி

ஆஹாரம், நித்திரை, அப்பிரம்மசரியம்... இந்த மூன்றும் மனித வாழ்க்கையைத் தாங்கும் மூன்று முக்கியமான தூண்கள். நல்ல உணவுப் பழக்கம் போலவே, அமைதியான தூக்கமும், ஒழுக்கமுள்ள செக்ஸ் வாழ்க்கையும் நம்முடைய ஆரோக்கியத்தைப் பேணுகின்றன.

ஒருவனுடைய சுகம், துக்கம், புஷ்டி, இளைத்துப் போகும் தன்மை, பலம், அபலம் இதெல்லாமே தூங்கும் பழக்க வழக்கங்களாலும் ஏற்படுகின்றன.

அகாலத்திலே தூங்குவது, நிறைய நேரம் தூங்குவது, தூங்கும் நேரத்தைக் குறைத்துக் கொள்வது இதெல்லாம் தவறான பழக்கங்கள்... ஆரோக்கியத்துக்கு வேட்டு வைக்கும்.

ராத்திரி கண் விழித்து, டீ.வியோ, சினிமாவோ பார்த்தால், மறுநாள் உடம்பிலே வாயு மிகுந்திருக்கும், உடம்பு உலர்ந்து போய், வாத கோபங்கள் வந்து விடும். மன சஞ்சலம் ஏற்பட்டு, எந்த வேலையிலும் முழுமையான கவனம் செலுத்த முடியாமல் அலுப்பு ஏற்படும். கை, கால்கள் வலிக்கும்.




இரவில் தூங்காது ஆந்தை போல கண்விழித்தால், பகலில் தூக்கம் வரும். அதையே பழக்கிக் கொண்டால், கபம் அதிகரித்து, உடம்பு பெருக்கும். வாத பிரக்ருதிகள் எனச் சொல்லப்படுகின்ற மெலிந்த உடல் உடையவர்கள், பகலில் தூங்கலாம். இவர்கள் ஏழெட்டு மணி நேரம் கூடத் தூங்கலாம். அதனால் ஆரோக்கியக் கேடு ஏற்படாது. பித்த பிரக்ருதிகள் ஆறு மணி நேரம் தூங்கினாலே போதும். கப பிரக்ருதிகளுக்கு அது கூட வேண்டாம். ஐந்து மணி நேரத் தூக்கமே போதுமானது. வெயில் காலத்தில், பகலில் சற்று நேரம் தூங்கலாம். ஆனால் அதையே பழகிக் கொண்டுவிடக் கூடாது.

டென்ஷனான வாழ்க்கை முறை உள்ளவர்கள், அதிகமான செக்ஸ் செயல்பாடுகள் கொண்டவர்கள், அதிகப் பயணம் செய்பவர்கள், உடல் களைப்பு மிகுந்தவர்கள், வயதானவர்கள், மெலிந்த உடல்வாகுக்காரர்கள், பாலர்கள், அடிபட்டவர்கள், நோய்வாய்ப்பட்டவர்கள் இவர்கள் எல்லாம் பகலில் கொஞ்சம் தூங்கலாம். தூங்கினால் நல்லதுதான்.

கபம் கூடிய ஆட்கள் எல்லாம் பகலில் தூங்கக் கூடாது. இத்தகையவர்கள், அதிகமாகத் தூங்கினால், பீனஸம், தொண்டை வலி, காய்ச்சல், பசியின்மை எல்லாம் ஏற்படும்.

ஒரு சிலர், தானாக வந்து கண்கள் மீது கவியும் தூக்கத்தைக் கூட விரட்டியடிப்பார்கள். இது மிகவும் தவறு. ஒவ்வொரு மனிதனுக்கும், சுகமான ஓய்வு கொண்ட தூக்கம் தேவை. தூங்காமல் இருந்தால், தலைவலி, சோம்பல், களைப்பு, உடல் விறைப்பு எல்லாம் ஏற்பட்டு, ஆரோக்கியத்தைப் பாதிக்கும்.

"என்னென்னவோ செய்து பார்த்துட்டேன் ஸார். பொட்டுத் தூக்கம் கூட வர மாட்டேங்குது. தெருவோரத்தில், சந்தை இரைச்சலில், வெறும் கட்டாந்தரையில் ஹாய்யாக தூங்குபவர்களைப் பார்த்தால் பொறாமையாக இருக்கிறது'' என்று புலம்பித் தவிக்கும் கேஸ்களும் உண்டு.

ஆயிரம் எண்ணங்கள் அலைபாய, கவலையோடும், கோபதாபங்களோடும் படுத்தால், கண்டிப்பாகத் தூக்கம் வராது தகராறு செய்யும்தான். நிச்சிந்தையாகத் தூங்கும் அளவுக்கு வாழ்க்கையை அமைத்துக் கொள்வது உங்கள் கையில்தான் உள்ளது.

'க்ஷீரபலா' என்ற தைலத்தை உச்சந் தலையிலும், பாதத்திலும் தேய்த்துக் கொண்டால், 'ஜிவ்' என்று தூக்கம் வரும். சில சமயங்களில், இரவில் எருமைத் தயிர் சாப்பிடச் சொல்வோம். சொக்கிக் கொண்டு தூக்கம் வரும். 'அஸ்வகந்தா' என்ற சூரணமிருக்கிறது. அதைப் பாலில் கலந்து சாப்பிட்டாலும், நல்ல தூக்கம் வரும்.

தினமும் ஒரு குறிப்பிட்ட நேரத்திலே எழுந்து, குறிப்பிட்ட நேரத்திலே தூங்கப் போனாலே, இயல்பான நித்திரை சுகமாக அமையும். இதெல்லாம் தினசரி பழக் கத்தில் வருவது. முயற்சி செய்யுங்கள்.

தூக்கத்துக்கு அடுத்தபடியாக வருவது ஒழுங்குபடுத்தப்பட்ட தாம்பத்திய வாழ்க்கை. அதாவது ரெகுலேடட் செக்ஷுவல் லைஃப். ஆகாரம், நித்திரையைப் போலவே, தாம்பத்திய உறவும் மனிதனுக்கு அவசியமான ஒன்றுதான்.

செக்ஸ், மது, அசைவம் இவை மூன்றையும் ஆயுர்வேதம் முழுமையாகத் தவிர்க்கவில்லை. தடை போடவில்லை. அளவோடும் நெறிப்படுத்தியும் அனுமதிக்கிறது.

'ஆயுர்வேதம்' என்றதும் சுத்த சைவம்னு நினைச்சுடாதீங்க. உலகத்திலே உள்ள எல்லா வகையான பிராணிகளின் இறைச்சிகளைப் பற்றியும் ஆயுர்வேதம் அறிந்து சொல்லியிருக்கிறது. ஆஹார தாத்பரியமாகவும், மருந்து தாத்பரியமாகவும் சொல்லப்பட்டிருக்கும் விஷயங்கள் மிக அற்புதமானவை. ஆனால் அதற்கான எல்லைக் கோடு, எது என்பதையும் தெளிவாகச் சொல்லியிருக்கிறது. அளவுக்கு மீறினால் என்னென்ன கெடுதல் ஏற்படும் என்று விவரமாக விளக்கப்பட்டுள்ளது. அதுதான் ஆயுர்வேதத்தின் விசேஷம்.

நன் மக்களைப் பெறும் நோக்கத்தில், மனைவியுடன் கொள்ளும் தாம்பத்திய உறவு, மனிதனுக்கு உற்சாகத்தைத் தருவதால், அதில் தடையேதுமில்லை. செக்ஸ் நடவடிக்கைகள் அதிகமாக இருப்பின், இந்திரியம் பலவீனப்படும். கைகால் உடல் வலி ஏற்படும். கவனச் சிதறல் ஏற்படும். எனவே, மிதமான தாம்பத்திய உறவு சிபாரிசு செய்யப்படுகிறது.

(தொடரும்)



டி.கே. பட்டம்மாளின் தம்பி டி.கே. ஜெயராமன், அக்காவிடம் சங்கீதம் பயின்று தமக்கேயுரிய ஒரு பாணியை உருவாக்கி பெரும் வெற்றி கண்டவர். இசையாசிரியராகவும் தன்னிகரற்ற இடம் பெற்று விளங்கினார். அவரது சிஷ்யர்களுள் முக்கியமானவர் என். விஜய் சிவா. பதினான்கு வருடங்கள் டி.கே.ஜெ. வகுப்புகளை அனுபவித்து ஒரு கச்சேரி கலைஞராய் உருவாக்கப்பட்டவர். 'அது ஒரு தனி உலகம்' என்று தமது பயிற்சிக் காலம் பற்றிக் குறிப்பிடும் விஜய் சிவா, இக்கட்டுரை மூலம் அந்த உலகத்துக்குள் சற்று எட்டிப் பார்க்க நம்மை அழைத்துப் போகிறார்.

## என். விஜய் சிவா

# வகுப்புகளிடையே

**ரா**தா பார்த்தசாரதி சிறுமியாக பாட்டு கிளாஸில் வந்து உட்கார்ந்தபோது, அவளை யாரும் ஒரு கலைஞராகக் கற்பனை பண்ணிப் பார்த்தேயிருக்க முடியாது. நன்றாக வாய் விட்டுப் பாடுவாள். மிகக் கூர்மையாக கவனிப்பாள். ஆனால் அவளுக்குள் ஒளிந்து கிடந்த கலையுணர்வையெல்லாம் தட்டி எழுப்பி வெளியே கொண்டு வந்தவர் எங்கள் குரு டி.கே. ஜெயராமன். ஆணித்தரமாகக் கற்றுத் தருவார்; ம்ருதுவாகத் திருத்தி செதுக்கி செதுக்கி, ராதாவை மனமுருகப் பாடும் கலைஞராக்கிவிட்டார். இன்று ராதா சம்பிரதாயம் வழுவாமல் பாடக் கேட்டால் நம் கண்கள் பனித்துப் போகும்.

ராதாவின் பாட்டைக் கேட்டுவிட்டு அவர் மிக நன்றாகப் பாடினார் என்று டி.கே.ஜெயிடம் சொன்னால், ஒரு புன் முறுவல் மட்டுமே அவரிடமிருந்து பதிலாக வரும்! ஒரு நல்ல பாடகரை உயர்ந்த கலைஞராக அவர் எவ்வாறு உருமாற்றினார்...? அது யாருக்கும் தெரியாத, புரியாத விந்தைதான்.

எல்லோரும் பொதுவாக வாழ்க்கையினிடையே பாட்டு கிளாஸ் நடத்துவார்கள்; ஆனால் டி.கே.ஜெ. இசை வகுப்புகளிடையே வாழ்க்கை நடத்தினார்! காலையில் அவர் பல் துலக்கும் முன்பே சிஷ்யர்கள் வந்து விடுவார்கள். அவர்கள் பாடுவதைக் கேட்டபடியே பல் துலக்கிவிட்டு காப்பியுடன் வந்து ஹாலில் உட்காருவார். மாணவர்கள் அதுவரை செய்த பிழைகளை நினைவில் கொண்டு டக் டக் கென்று திருத்துவார். அவர் கைகள் பல் தேய்த்துக் கொண்டிருக்கும் நேரம் காதுகள் பாட்டைக் கவனமாய்க் கேட்டுக் கொண்டிருந்திருக்கும்!

கிரிக்கெட் ஸ்கோர், இன்ஸுலின் ஊசி, டெலிஃபோன் அழைப்பு, மகன்கள் அல்லது மகளுக்கு தினசரி வேலை கட்டளைகள், மனைவியுடன் குடும்ப விஷயங்கள் பற்றிய உரையாடல், அக்காவும் குருவுமான டி.கே. பட்டம்மாளிடமிருந்து தினசரி நல்வாழ்த்துக்கள், போதனைகள் என்று வகுப்புகளினிடையே சிற்சில வினாடிகள் செலவிட்ட வண்



சீஸன் சிறப்புப் பக்கம்



# வாழ்க்கை!

ணம் இருப்பார். ஆனால் அத்தனைக்கும் இடையே கவனம் சிதறாமல் கோபப்படாமல் கற்றுத்தருவார்.

தோரணையோ பந்தாவோ அற்ற அவருடைய அணுகு முறையே முதலில் மாணவர்களைக் கொள்ளை கொண்டுவிடும். காலை ஆறு மணிக்கு லுங்கி உடுத்திக் கொண்டு வெகு எளிமையாய் வந்து சோஃபாவில் உட்கார்ந்தாரானால் இரவு ஒன்பது மணி வரை கிளாஸ்!



அண்டை நாட்டைச் சேர்ந்த நண்பர் ஒருவர் வகுப்புக்கு வருவார். அவர் பாடுவதைக் கேட்டால் யாராலும் சிரிக்காமலே இருக்க முடியாது. ஆனால் டி.கே.ஜெ. சிரிக்காமல் கற்றுக் கொடுப்பார். நாடு கடந்து வந்து கற்றுக் கொள்கிறாரே என்று அவரை சிஷ்யராய் ஏற்றிருக்கக் கூடும்.

"எப்படி முடிகிறது?" என்று கேட்டால், "அவர் மனசு புண்படும். அவர் உத்ஸாஹத்தை நான் கெடுக்க மாட்டேன்" என்பார். அப்படி ஒரு நபருக்குக் கற்றுத் தருவதால் தமது நேரம் வீணாகிறதே என்று அவர் கணக்குப் போட்டதில்லை.

வகுப்புகளில் அவர் அமர்ந்து இரு கைகளையும் வான் நோக்கித் தூக்கிக் கொண்டு 'ஹிரண்மயீம்லக்ஷ்மீம்' என்று பாடும் காட்சி அத்தனை சிஷ்யர்கள் மனத்திலும் மிகப் பசுமையாய் இருக்கும். அந்த மாதிரி உருகிப் பாடும் நேரங்களில் கூட சீஸர் என்ற நாய்க்குட்டி அவர் மடியில்தான் இருக்கும். அவ்வப்போது அவர் லுங்கியை ஈரமாக்கும்! டி.கே.ஜெயின் மடியிலிருந்து கொண்டே சங்கீத ஞானத்தைச் சம்பாதித்துக் கொண்டது சீஸர்!



"இருமய்யா இரும்! புதுசாக் கல்யாணம் ஆனவன் மாதிரி அவசரப்படுகிறீரே..."

பெரிதாக வளர்ந்த பிறகு சீஸரை மடியில் உட்கார வைத்துக் கொள்ள முடியவில்லை. ஆனால் அது பாட்டு கிளாஸை விட்டு விலக மறுத்தது. வகுப்பு நடத்திய கூடத்துக்கு வெளியே வெராண்டாவில் ஜன்னல் கம்பியில் சீஸரைக் கட்டி வைத்திருப்பார். அதன் முகம் மட்டும் கூடத்து நிலைக்கதவை எட்டித் தொடும் நீளத்துக்குக் கயிறு! சீஸர் அங்கேயே தவமிருக்கும்! பாட்டு கேட்கும்! வருகிற போகிற மாணவர்கள் அத்தனை பேரும் சீஸரிடம் அட்டென்ட்ஸ் கொடுத்துவிட்டுத்தான் போக முடியும்! டி.கே. ஜெவையும் அவர் சீடர்களையும் கண்டால் அதற்குத் தனி குஷி. முன்னங்கால்களைத் தூக்கிக் கொண்டு நம்மை வரவேற்கும். நாங்கள் கற்றதற்கும் கல்லாமல் விட்டதற்கும் அந்த சீஸரே சாட்சி! பாட முடிந்திருந்தால் கன ஜோராகப் பின்பாட்டுக் கூட பாடியிருக்கும் சீஸர்!

முத்துஸ்வாமி தீக்ஷிதரின் கமலாம்பா ஆவரண கீர்த்தனைகளைத் தமது சிஷ்யர்கள் அனைவருக்கும் கற்றுத் தந்துவிட வேண்டும் என்று முடிவு செய்து விட்டார் டி.கே.ஜெ. தினமும் மாலை ஆறு மணிக்கு ஆரம்பித்து இரண்டு மணி நேரம் வகுப்பு. 22 சிஷ்யர்கள் அடங்கிய பெரிய குழு. அத்தனை பேரும் ஒரு குரலில் பாடியாக வேண்டும். வார்த்தைகளைச் சொதப்பாமல், காகிதத்தைப் பார்க்காமல், ராகம், தாளம் சுருதி பிசகாமல் கச்சிதமாய்ப் பாடியாக வேண்டும். கடுமையான பயிற்சி அளித்தார்.

நவாவரண கீர்த்தனைகளின் அமைப்பும் சிறப்பும் அறிந்தவர்களுக்கு இது எப்பேர்ப்பட்ட காரியம் என்பது புரியும். ஒரு மஹா பொக்கிஷத்தை எங்களுக்கு அளிப்பதற்காக இப்படி உயிரையே கொடுத்து உழைத்த எங்கள் குருவுக்கு வழக்கமாய்த் தரும் சன்மானம் மட்டும் போதாது; அதற்கும் மேல் ஏதாவது செய்ய வேண்டும் என்று விரும்பினோம். 'என்ன செய்யலாம்' என்று அவருக்குத் தெரியாமல் நாங்கள் கலந்தாலோசித்துக் கொண்டிருந்த சமயத்தில், அவரே எங்களை அழைத்து, விசேஷ குரு தக்ஷிணை வேண்டும். இன்னின்னார் இவ்வளவு செய்ய வேண்டும் என்று சொல்லிவிட்டார். 'இவ்வளவு தானா?..' என்று, எல்லோரும் கேட்டதைக் கொடுத்துவிட்டார்கள். ஆனால் அவரோ எல்லாவற்றையும் திருவாரூர் கமலாம்பாள் கோயிலுக்கும் சில சிஷ்யர்களின் நலனுக்காகவும் செலவழித்து விட்டார்.

சிஷ்யர்கள் நலனில் டி.கே.ஜெ. காட்டிய அக்கறை அளவில்லாதது. 'துளஸீதளமுல' கற்றுத் தந்து கொண்டிருந்தார். வகுப்பு முடிந்து வாசல் கேட் வரையில் சென்றுவிட்டேன். திரும்ப அழைத்தார் என்னை.

"மறுபடி அந்த சங்கதியைப் பாடு..." என்றார்.

அவருக்குத் திருப்தி ஏற்படுகிற வகையில் அதை என்னால் பாட முடிந்த பிறகுதான் வீட்டுக்குப் போக அனுமதித்தார்!

அதே சமயம், சிஷ்யன் நன்றாகப் பாடிவிட்டால் போதும், அவன் வீடு போய்ச் சேர்வதற்குள் அவன் அப்பா – அம்மாவுக்கு ஃபோன் செய்து பாராட்டு தெரிவித்து விடுவார்!

அவர் சீடர்களுள் டி.ஜி.பத்ரி நாராயணன் ஓர் அரசாங்க அதிகாரி. சில சமயம் அலுவல் நிமித்தமாக வெளியூர் சென்று விடுவார். நீண்ட நாட்கள் வகுப்புக்கு வர இயலாது போய்விடும். அவருக்கு ஃபோன் செய்து வரச் சொல்லிக் கூப்பிடுவார் டி.கே.ஜெ. "ஓய் பத்ரி! நீர் கிளாஸுக்கு வராவிட்டால் பரவாயில்லை. வெறுமே வந்து பார்த்துவிட்டுப் போம் ஐயா! வரும்போது புளியோதரையும்

காந்திகடை வேர்க்கடலையும் வாங்கி வாரும்...'' என்பார்.

வராத சீடன் நீண்ட நாள் கழித்து வந்தால் வசவு காத்திருக்காது; வரவேற்புத்தான்! சிஷ்யனை அவன் குடும்பத்தோடு ஏற்றுக் கொள்வார். அவர்கள் நலனுக்காக டி.கே.ஜெ. செய்யாத உதவி இல்லை. பணம், பள்ளி அட்மிஷன், வேலை வாய்ப்பு, மருத்துவ உதவி.... ஏன் அவர்களுடைய காதல் விவகாரங்களில் கூட அவர் உதவத் தயாராய் இருந்தார். அதே சமயம் ஒருத்தருக்குச் செய்த உதவி பற்றி மற்றவரிடம் வெளியிடவோ பேசவோ மாட்டார்.

டி.கே.ஜெயின் நகைச்சுவை உணர்வு, எங்கள் வகுப்புகளைக் கல கலப்பாக்கிய வண்ணமிருந்தது.



• குருவும் சிஷ்யனும்

கடைசி காலம் வரை அந்த நகைச்சுவை உணர்வு அவரை விட்டு அகலவில்லை. அவர் சிஷ்யர்களுள் மிக மூத்தவர் வி. சுந்தரேசன் என்கிற சுந்து மாமா. தாம்பரத்திலிருந்து ஆழ்வார்பேட்டை வரையில் வருவார் பாட்டு கிளாஸுக்கு!

டி.கே.ஜெ. காலமாவதற்கு முந்தைய தினம், ஜனவரி 24ம் தேதி (1990), கிளாஸுக்கு வந்த சுந்து மாமா, ''நான் சீக்கிரம் வீட்டுக்குப் போகணும்'' என்றார்.

''இருமய்யா இரும்! புதுசாக் கல்யாணம் ஆனவன் மாதிரி அவசரப்படுகிறீரே...'' என்று டி.கே.ஜெ. பரிகாசம் செய்ய, சுந்து மாமா உட்பட அனைவரும் கொல்லென்று சிரித்து விட்டனர்!

இப்படியே சிரிப்பும் குதூகலமுமாகத்தான் வகுப்புகள் எப்போதும் இருக்கும். வகுப்புகள் முடிந்த பின் அவர் எங்களைப் போல் பேசிக் காட்டுவதும் நாங்கள் அவரை 'இமிடேட்' செய்வதுமாக அமர்க்களப்படும். தம்மைப் போலவே பேசி நடித்துக் காட்டுவதை ரொம்ப ரசித்து அனுபவிப்பார் டி.கே.ஜெ.

இசையில் சம்பிரதாய சுத்தத்தைப் போற்றினாலும் கற்பிக்கும் முறையில் காலத்துக்கு ஏற்ப மாற்றங்களை அனுமதித்து ஏற்றார் டி.கே.ஜெ. ஆரம்ப நாட்களில் டேப் ரிகார்டரை வகுப்புகளில் தடை செய்து வைத்திருந்தார். பின்னாளில் அதன் அவசியத்தையும் அனுகூலத்தையும் உணர்ந்து அவரே டேப் ரிகார்டரை அனுமதித்ததுடன், பயிற்சி காஸெட்களைப் பாதுகாத்து வைக்கவும் சொல்லுவார்.

பாடலின் ஒரு பகுதியைக் கற்றுத் தரும் போது பதிவு செய்து விடுவோம். பிறகு ''தள்ளு'' என்று ஆணையிடுவார்! 'தள்ளு' என்றால் அவர் மொழியில் 'ரிவைன்ட்' செய், மீண்டும் கேட்கலாம் என்று அர்த்தம். இதை அறியாது, சிஷ்யன் மனோஜ், அவர் 'தள்ளு' என்றதும் டேப் ரிகார்டர் இருந்த சிறு மேஜையைத் தள்ள ஆரம்பிக்க, அதை வியந்து வியந்து ரசித்தார் டி.கே.ஜெயராமன்!

அதுதான் டி.கே.ஜெ. இசையுணர்வோடு நகைச்சுவையுணர்வு, ரசனையோடு மனித நேயம், ஓர் ஆசிரியரின் கம்பீரத்துடன் சிநேகிதனின் சௌலப்யம் என்று ஒன்றையொன்று இட்டு நிரப்பிய குணங்கள் அவரது வாழ்க்கையையும் சங்கீதத்தையும் வளப்படுத்திக் கொண்டே இருந்தன. அந்த வளங்களை அப்படியே வஞ்சனையின்றித் தமது சிஷ்யர்களுக்கு வாரி வாரி வழங்கினார் அவர்.

அதனால்தான் அவர் காலமாகி பன்னிரண்டாண்டுகள் ஆன பிறகும் அவருடைய சிஷ்யர்கள் வட்டம் இன்னும் வலுவாக இருக்கிறது. அவர் போட்டுச் சென்ற அஸ்திவாரத்தில் டி.கே.ஜெ. மாணவர்கள், குழுவினராகச் சேர்ந்து மேடை நிகழ்ச்சிகளை இன்றும் வழங்க முடிகிறது.

டி.கே.பட்டம்மாள், தமது தம்பியும் சிஷ்யனுமான ஜெயராமன் பற்றி இன்றைக்கும் பெருமிதமாகச் சொல்லுவார்:

''கற்பூர புத்தி அவனுக்கு. அவனைப் போல இன்னொரு மாணவன் கிடையாது'' என்று சத்தியமே செய்வார். 'பொறுமையின் சிகரம்' என்று அக்காவைக் கொண்டாடுவார் தம்பி. அக்காவுக்கும் தம்பிக்குமிடையே நிலவிய அந்த அபூர்வ பந்தம் அன்பு செலுத்துவதிலே எங்களுக்கு வழிகாட்டலாக அமைந்தது. ○

சீசன் சிறப்புத் தொடர் - 1

**சீதா ரவி**

# ஸரிகம பாப்பா!

"சுந்தரீ...ஈ.......!" - கண்ணோடு காண்பதெல்லாம் ரேஞ்சுக்கு ரீயைத் தூக்கிப் பிடித்து நிறுத்தி, ஒரு சுத்து சுத்தினான் சத்தியமூர்த்தி.



''ஏன் இப்படிக் கத்தறீங்க! பாப்பா பிறக்கறதுக்கு முன்னாடியே பயந்துக்கும்..''

''பின்னே நம்ம சீமந்த புத்ரி சீசன் ரிலீஸ்னா சும்மாவா?... நான் அப்படித்தான் கத்துவேன், குதிப்பேன், உன்னைத் தூக்கி குடை ராட்டினம் சுத்துவேன்..''

''ஐயோ! விடுங்க. எந்த ராட்டினமும் சுத்தாமலே வயித்தைப் புரட்டியெடுக்குது..''

''சரி... நம்ம பாப்பாக்கு என்ன பேர் வைக்கலாம்...?''

''பையனா பொண்ணான்னு தெரியாம பேரை எப்படி நிச்சயம் பண்றது?..''

''நிச்சயமா பொண் தான்... அதுவும் டாக்டர் டிசம்பர் ஒண்ணுன்னு தேதி கொடுத்திருக்கறதால பிறக்கும் போதே பாடிக்கிட்டுத்தான் பிறப்பா பாரு... ஷி வில் பீ எ சைல்ட் பிராடிஜி!''

''வேணாம்ப்பா! அவசரப்பட்டு, பேரைக் கெடுத்துக்காதீங்க... உங்க வாக்கு பலிக்கலைன்னா அசத்தியமூர்த்தி ஆயிடுவீங்க'' என்று எச்சரித்தாலும் சுந்தரிக்கு உள்ளூர எக்கச்சக்க ஆசை.

கதுப்புக் கன்னமும் வட்ட விழிகளுமாக ஒரு செக்கச்செவேல் பெண் குழந்தை வேண்டும்; அது பக்கத்து வீட்டுக் குட்டிப் பிசாசுகளைப் போல் பகலில் தூங்கி இரவெல்லாம் அழுது அலறாமல், பிறந்தது முதலே பௌத்த சன்னியாசினி போல் அமைதியா





யிருக்க வேண்டும்; ப்ரீ.கே.ஜி. என்ட்ரென்ஸ் டெஸ்டில் நூற்றுக்கு நூற்றிருபது வாங்கி நகரின் ஆடம்பர - ஸாரி, ஆரம்பப் பள்ளியில் அனாயாசமாய் இடம் பிடித்து, மதிப்பெண்களை அள்ளி, டபுள் டாக்டரேட் அல்லது ட்ரிபிள் பி.ஜி. என்று கண்ணிமைக்கும் காலத்தில் முன்னேறி, சாஃப்ட்வேர் இளஞ்சிங்கமொன்றைக் கைப்பிடித்து...

- சேச்சே! சுந்தரியின் ஆசைகள் இவ்வளவு சராசரியானவை அல்ல.

தன் தாய்வழி தாத்தா வயலின் வேங்கடராமய்யரின் சுருதியுணர்வும் சத்தியமூர்த்தியுடைய தந்தைவழி பாட்டனார் பல்லவி பலராமய்யரின் லய மேதைமையும் சரிவிகிதத்தில் கலந்து, பிறக்கும் போதே சுஸ்வரமாக அழுகிற ஒரு பெண் குழந்தை வேண்டும். அது மூன்று வயதில் ராகம் கண்டுபிடித்து, பதின்மூன்று வயதில் கச்சேரி செய்து, இருபத்துமூன்றில் இசைஜோதி பட்டம் பெற்று, சினிமாப் பாட்டு, மெகா சீரியல் டைட்டில் சாங் என்று முன்னேறி, கடைசியில் சங்கீத வராநிதி பட்டத்தையும் வாங்கி...

- சுந்தரியின் கற்பனை துரித காலத்தில் இப்படித் துள்ளியோட, அந்த நெஞ்சு நிறைவில் அவள் கண் பனிக்க, "சீச்சி! பிள்ளைத்தாய்ச்சி அழக்கூடாது'' என்று சத்தியமூர்த்தி அவளைச் சமாதானம் செய்யும்படியாகி விட்டது.

**ந**வம்பர் முப்பதாம் தேதி மாலை சுந்தரிக்கு வலி கண்டபோது சத்தியமூர்த்தி தலைகால் புரியாமல் குதித்தான். சரியாக நள்ளிரவு, பெண் குழந்தை பிறந்துள்ளதாக நர்ஸ் வந்து அறிவித்தபோது சிலிர்த்தான். அடடா! பிறவியிலேயே என்ன டைமிங்! ஒரு மகாவித்வான் தாளம் பிசகாமல் இடத்துக்கு வந்து முடிக்கும் துல்லியம் அல்லவா! அரை இடம், கால் இடம், காலே அரைக்கால் இடம் என்று எடுப்பு மாற்றி மாற்றி ஸ்வரம் பாடும் வித்வாம்ஸினியாக தன் மகள் வளர, நிரம்பிய அரங்குகளில் எழுந்த கரவொலி அவன் காதில் தேனாய்ப் பாய... இன்பக் கனவுகளிலிருந்து அவனை உசுப்பியது குழந்தையின் அழுகுரல். ஒரு கணம் உற்றுக் கவனித்தவன், பக்கத்திலிருந்த அம்மாவைப் பிடித்து ஓர் உலுக்கு உலுக்கினான்.

"மா...ம்மா! பா! பா! பாப்பா, பா!பா!"

"என்னடா சத்தியமூர்த்தி? என்னாச்சு உனக்கு? இப்படி மிரளாதே. குழந்தைன்னா பிறந்ததுமே அப்படித்தான் அழும்..."

"ஐயோ! அதுகூடத் தெரியாதா எனக்கு! கரீர்னு லங்க்ஸ்ல ஆக்ஸிஜன் நிரம்பறதால அழறது. ஆனா கவனி... நல்லா கவனி... நம்ம பாப்பா அழும்போது என்ன கேட்கறது...?"

"வேறென்ன கேட்கும்? வயித்துக்குத்தான் கேட்கும்."

"கிடையாது! என் பொண் செவிக்குணவு இல்லாதபோதுதான் வயித்துக்குக் கேட்பா. அந்த அழுகையில் 'பா'ன்னு சுருதி சுத்தமா பஞ்சமம் கேட்கலை...?"

'எந்த சுருதிக்குப் பஞ்சமம்?' என்று சத்தியமூர்த்தியின் அம்மா கேட்க நினைத்தாள். அதற்குள் குழந்தை மீண்டும் அழ ஆரம்பிக்க, "பா! பா! அடடா எத்தனை ஞானமிருந்தா பா பா ன்னு பாடிண்டே பிறப்பா என் பொண் ...!'' - உருகினான் சத்தியமூர்த்தி.

பெண்ணாய்ப் பிறந்தால் 'அமிர்தவர்ஷினி' என்று ஆசையாசையாய் யோசித்து வைத்த பெயர், அந்தக் கணமே 'பா பா'வாக உருமாறி 'பாப்பா'வாக இறுதி நிலைபெற்றது.

**நா**ளொரு காஸெட், பொழுதொரு சி.டி. என வளர்ந்தாள் பாப்பா. தூங்குவதற்கு நீலாம்பரி, விழிக்கையில் பூபாளம், பால் குடிக்கையில் பந்துவராளி, குளியலுக்கு குந்தலவராளி, பவுடர் போட பிந்துமாலினி, நாப்கின் மாற்ற நாசிகாபூஷணி என்று

> ''பலத்த மழைல வீட்டைச் சுற்றி வெள்ளக் காடாகி படகுப் பயணம்தான். ஆனா, அதுலயும் ஒரு நன்மை...''
>
> ''என்னது?''
>
> ''ஊட்டி போய் போட்டிங் செய்யணும்ங்கிற ஆசைய என் மனைவி விட்டுட்டா!''
>
> - கே.என்.பாலகிருஷ்ணன்

வளமான சங்கீத சூழ்நிலையைத் திட்ட மிட்டு வழங்கி வழங்கி மகிழ்ந்தனர் சத்திய மூர்த்தியும் சுந்தரியும். பாப்பா பாடப் போகும் நாளை எதிர்பார்த்து மூச்சடக்கிக் காத்திருந்தனர்.

பாப்பாவும் அத்தனை ராகங்களையும் கேட்டு மகிழ்ச்சியோடு வளர்ந்ததாகவே தோன்றியது. மூன்றாம் மாதம் ஒருக்களித்து, நான்காம் மாதம் கவிழ்ந்து, ஆறாம் மாதம் தவழ்ந்து, ஏழாம் மாதம் உட்கார்ந்து, எட்டாம் மாதம் நின்று, ஒன்பதாம் மாதம் நடந்தவள் ஒரே ஒரு காரியம் மட்டும் செய்யவே யில்லை...

- அழகாய்ச் சிரித்து, அலறலாய் அழுது, அதட்டலாய் அடிக்குரலில் உறுமினாலும் பாப்பா பேசவேயில்லை! ம்மா, ப்பா, தாத்தா, ம்ஹூம் அவ்வளவு ஏன்... ஒரு 'ஸ - ப - ஸ' கூடச் சொல்லவில்லை.

பதினோராம் மாதத்தில் ஒரு நாள் குழந்தை ஸ்பெஷலிஸ்ட் டாக்டர் குபேர செல்வத்திடம் கவலையோடு இதை விவாதித்தனர் சத்தியமூர்த்தி தம்பதி. அவர் பாப்பாவின் மெடிகல் ரெகார்ட்ஸை ஒரு பார்வை பார்த்துவிட்டு, கன்னத்தில் ஒரு தட்டு தட்டி (பாப்பாவைத்தான்)

"கவலைப் படாதீங்க... இப்படித்தான் ஒரு கபிள்... மூணாம் மாசமே குழந்தை பேசவே மாட் டேங்குதுன்னு ஓடி வந்தாங்க... மூணு வயசுக்குள்ளே எப்போ வேணா பேசும் போங்கன்னு அனுப்பி வைச்சேன். சரியா மூணு வயசானதும் திரும்பி வந்தாங்க - குழந்தை பேச ஆரம்பிச்சு நிறுத்த மாட்டேங்குதுன்னு!"

- தமது ஹாஸ்யத்துக்குத் தாமே மூன்று முறை ஹா! ஹா! ஹா! என்று சிரித்துவிட்டு, முழுசாக மூன்று நூறு ரூபாய் ஃபீஸூம் வாங்கிக் கொண்டு அனுப்பி விட்டார் டாக்டர் குபேரசெல்வம்.

கவலை தீராத சத்தியமூர்த்தி தம்பதி, ஜால ஜோதிடர் ஜகன்னாதனிடம் பாப்பாவின் ஜாதகத்தை எடுத்துக் கொண்டு ஓட, அவர் அதை ஒரு நோட்டம் பார்த்துவிட்டு,

"பேஷா இருக்கு... இன்னும் ஆறு மாசத்துல விவாக யோகம் சித்திக்கும் பாருங்கோ..." என்று ஒரே போடாய்ப் போட்டார்!

"இல்லை, பாப்பாவுக்கு இன்னும் பேசவே வரலை..."

"என்ன வயசு?"

"பதினொரு மாசம்..."

ஜாதகத்தை மீண்டும் பார்த்துவிட்டுச் சொன்னார்:

"ஆண்டு நிறைவுக்குக் காது குத்தி, ஸாரதி ஜெம்ஸ்ல சிவப்புக் கல் வாங்கி, கம்மல் பண்ணிப் போடுங்கோ... வாக்தேவி வந்து அப்படியே குழந்தை நாக்கிலே உட்கார்ந்துடுவா..."

கம்மல் என்ன, ஜிமிக்கியும் சேர்த்துச் செய்து போட்டு விடலாம் என்று முடிவு செய்தாள் சுந்தரி.

"எப்படியும் கச்சேரி பண்றப்போ தேவைப்படும். அதனாலே கொஞ்சம் பெரிசாவே பண்ணிடலாம்" - சத்தியமூர்த்தி சாங்க்ஷன் பண்ண, பாப்பாவின் சின்ன காதுகள் ஒரு வயது முதலே பெரிய பொறுப்பைத் தாங்க ஆரம்பித்தன.

ஆண்டு நிறைவுக்கு வந்திருந்த குடும்ப குரு சுவாமி ஆனந்தானந்தா, பளபளவென்று ஆடிய ஜிமிக்கியைப் பார்த்துவிட்டு வாய் நிறைய ஆசிர்வாதம் செய்தார்.

"இந்தக் குழந்தை பெரிய பாடகியா வரப்போறா. இன்னிக்கே ஒரு தம்பூராவை வாங்கி தினமும் இவ காது பட மீட்டுங்கோ. எப்போல்லாம் நேரம் கிடைக்கறதோ மீட்டுங்கோ... இவ எப்போ பாட ஆரம்பிப்பான்னு சொல்ல முடியாது. சரஸ்வதி கடாக்ஷம் விழுந்துடுத்து. எந்த க்ஷண






அதைக் கண்டுகளிக்க, காந்தித் தாத்தாவும் அவர் தலையில் உட்கார்ந்த காக்கை குருவிகளும், நாடு போகிற போக்கைக் கண்டு கவலைப்பட்டனர். ஆனால் பாப்பா மட்டும் வாயைத் திறந்து பாடவேயில்லை; ஏன் பேசக் கூட இல்லை. மூன்று வயதை நெருங்கியாயிற்று – இன்னமும் பேசவில்லை.

**"இன்னிக்கு வந்திருக்கிற ஒரு கடிதம் படிக்க ரொம்பப் பரிதாபமா இருக்கு ஸார்.."**

**"அப்படி என்ன எழுதியிருக்கு? படிங்க, கேட்கலாம்..."**

**"ஐயா, என் மாமியார் ஊரிலிருந்து வந்து இங்கே எங்க வீட்டிலே தங்கி இருக்காங்க. கங்கா, யமுனா, காவேரி முடிந்தவுடன்தான் போவேன் என்கிறாங்க. தயவு செய்து ஆவன செய்யக் கேட்டுக் கொள்கிறேன்!"**

**- ஆர். மங்களம்**

மும் நாதானுபவம் ஆரம்பம் ஆயிடும்.

மாலையே ஒரு தம்பூரா வாங்கி வந்தான் சத்தியமூர்த்தி. இருவருமாக சுருதி சேர்த்து அதை மாறி மாறி மீட்ட, மலங்க மலங்க விழித்துப் பார்த்து விட்டு வாயில் விரல் போட்டுக் கொண்டாள் பாப்பா. சற்று நேரத்துக்கெல்லாம் சொக்கிப் போய்த் தூங்கிப் போனாள்.

தினம் தினம் தம்பூரா மீட்டல் தொடர்ந்தது. காலை அலுவலகம் போகும் வரை சத்தியமூர்த்தியே சாதகன். அதன் பின்னர் சுந்தரி சாதகியானாள். மாலையில் மெரினாவில் வாக்கிங் போனால் கூட தம்பூராவைத் தூக்கிக் கொண்டுதான் போனார்கள். திடீரென்று பாப்பாவுக்குப் பாட வந்துவிட்டால் என்ன செய்ய! மேலும், நடையினிடையே சில நிமிடங்கள் உட்காரும் போது நேரத்தை வீணாக்க வேண்டாமே.

சுந்தரி பாப்பாவைப் 'பிராம்' வண்டியில் வைத்துத் தள்ளி வர, சத்தியமூர்த்தி தம்பூராவை ஏந்திக் கொண்டு பக்கத்திலேயே நடக்க, மெரினா நடைபாதையில் அவர்களைக் கண்ட குண்டு மாமிகளும் தொந்தி மாமாக்களும் ஆச்சர்யத்திலேயே உடவிளைத்துப் போனார்கள். வி.ஆர்.எஸ். மற்றும் நான் - வி.ஆர்.எஸ். பிரிவுகளைச் சேர்ந்த பார்டிகளின் வட்டமேஜை மாநாடுகள் ரத்தாகி, வாயடைத்துப் போய் இந்தப் புதுமை ஊர்வலத்தைப் பார்த்தார்கள். சுண்டல், மிளகுவடை பையன்கள் டிக்கெட் வாங்காத சினிமாவின் காமெடி டிராக்காக

மூன்றாவது பிறந்த நாளுக்கு மூன்று வாரங்கள் முன்பாக ஒருநாள், பாப்பாவின் பேசா நிலை கண்டு மனமுடைந்து போய் சுந்தரி கண்ணீர்விட்டபடி, ரேடியோவை 'ஆன்' செய்தாள். வயலினில் மிக இனிமையான, புதுமையான ராகத்தில் ஆலாபனை தவழ்ந்து வந்தது. மூக்கைச் சிந்திக் கொண்டே சத்தியமூர்த்தியிடம் கேட்டாள்-

"இது கர்ணரஞ்சனிதானே...?"

"இல்லே. இப்படி வேகமா மூக்கைச் சிந்தினால் முகாரி ராகம்!"

"கிண்டல் பண்ணாதீங்க. சீரியஸா கேட்கறேன்..."

"கர்ணரஞ்சனி மாதிரியும் இருக்கு - ஆனா அது இல்லே... தெரியலையே..." என்றான் சத்தியமூர்த்தி.

"சாளகபைரவி" - கணீரென்று அழுத்தம் திருத்தமான குரல் வெளிப்பட்ட திசையை இருவரும் திரும்பிப் பார்த்தார்கள். பாப்பா தூக்கத்திலிருந்து எழுந்து விரல் சப்பிக் கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

"என்ன சொன்னே...?" சுந்தரி அவளைப் பார்த்து அவநம்பிக்கையுடன் கேட்க,

பாப்பா வலது கை கட்டை விரலை வெடுக்கென்று வாயிலிருந்து எடுத்தாள்.

"சாளகபைரவி!" - ஸ்பஷ்டமாக, மிகச் சரியாகச் சொல்லிவிட்டு, அதே வேகத்தில் விரலை வாயில் போட்டுக் கொண்டாள் பாப்பா!

(தொடரும்)

* பொன்னழகு...

செலக்டிவ் அம்னீஷியாவை ஜெயலலிதாவும் அத்வானியும் மறந்திருக்கலாம். ஆனால் தொலைக்காட்சிக்காரர்கள் சுவீகரித்துக் கொண்டுவிட்டார்கள். சிவாவுக்குப் பைத்தியம் தெளிந்துவிடுகிறது. ஆனால் மனநலமின்றி இருந்தபோது, தான் காதலித்த நர்ஸைத் தொடர்ந்து காதலிக்கிறார். அதேசமயம் மனநலக் குறைவுக்கு முன்பு மணந்த தமது மனைவியை அவருக்கு நினைவில்லை. இந்தக் கதைப்போக்கைப் படித்துவிட்டு யாருக்காவது மனநலக் கோளாறு ஏற்பட்டால் 'காவ்யாஞ்சலி' தொடர் சம்பந்தப்பட்டவர்களே பொறுப்பு.

பொன் கிடைச்சாலும் புதன் கிடைக்காது என்பார்கள். யதேச்சையாக, ஒரு பொன்னான புதன் அன்று மாலை ஆறு மணிக்கு டீ.வி.யைத் திருப்பினால், அட!... பொன், வெள்ளி, முத்து, பவழம் என்று அடுக்கிக் கொண்டிருந்தார் (அழகே உன்னை ஆராதிக்கிறேன்! ஜெயா டீ.வி.) அழகுக் கலைஞர் மைதிலி. 'வாங்கி அணிந்தால் பெண்கள் அழகு கூடும்' என்று சொல்கிறாரோ என்று நினைத்தால், அத்தனையும் ஜொலிக்க வைக்கும் ஸ்பெஷியல் வகைகளாம்! கொஞ்சம் காஸ்ட்லியான அழகுதான்!



# ஜீன்ஸும் மேகலையும்

ஏ.வி.எம்.மின் 'பக்த ப்ரகலாதா'வில் (கே டீ.வி.) இரண்யனாக ரங்காராவ். பிரகலாதனாக ரோஜாரமணி. பழைய படம் - ரங்காராவ் அமரராகிவிட, ரோஜாரமணியின் மகன் கதாநாயகனாக சில படங்களில் நடித்துக் கொண்டிருக்கிறார். நாரதராக வந்தவரின் முகம் மிகவும் தெரிந்ததுபோல் இருந்தது. அவர் வாயைத் திறந்து பாடியபோது உண்மை பளிச் சென்று புலப்

* வங்கி அழகு

பட்டது. பாலமுரளி கிருஷ்ணா!


* ராம்கி

ஜெயா டீ.வி.யின் இளமை பொங்கும் நிகழ்ச்சிகளில் ஒன்று 'பாடுவோர் பாடலாம்.' பின்னணிப் பாடகி சாக்கோ பார் குரலழகி அனுபமா கும்மாளமாகத் தொகுத்து வழங்கியது ஒரு பக்கம் இருக்கட்டும்... அந்த வித்தியாசமான காஸ்ட்யூம்... கண்ணுக்கும் விருந்துதான். ஸ்லீவ் லெஸ் கோட்டுக்கு, கல் பதித்த வங்கி! அடுத்த வாரம் ஜீன்ஸுக்கு முத்து மேகலையா?

தமிழ்ப் பாடல்களின் அருமையை விளக்க ராஜ் டீ.வி.யில் குமரிஅனந்தன் ஒரு சுவையான சம்பவத்தை மேற்கோள் காட்டினார். பாரதியார் ஒருமுறை ஹார்மோனியத்தின் அத்தனைக் கட்டைகளையும் ஒருசேர அழுத்தியபடி வாசிக்க, அவர் மனைவி செல்லம்மாள் ஓடோடி வந்து "இதென்ன கர்ணகடூரமான வாசிப்பு?" என்றாராம். " நீ சமஸ்கிருத ஸ்லோகங்களைப் பதம் பிரிக்காமல் தவறான ராகத்திலும் பாடியபோது எனக்கும் இப்படித்தான் இருந்தது'' என்றாராம்.

சம்பா என்றதுமே சம்பல் பள்ளத்தாக்கும் பூலான் தேவியும் கூடவே நினைவுக்கு வருவதைத் தவிர்க்க முடியவில்லை. ஒரு வேளை ஸ்டார் விஜய்யில் ஆபாவாணன் பிரம்மாண்டமாக எடுத்து வெளியிடும் 'சம்பா' தொடரும் பூலான் தேவியின் கதையைப் போலத் தானோ? போதாக் குறைக்கு ''தாவர பட்சிணி மாமிசபட்சிணி ஆன கதை கேளுங்க'' என்ற டைட்டில் சாங் வரி. யூகம் சரி தானா இந்துமதி அவர்களே?

ஸ்டார் விஜய்யில் ராம்கியும் அவரது குடும்பத்தினரும் சீனா மற்றும் சிங்கப்பூர் வாஸ்து தங்கள் வாழ்க்கையையே மாற்றியதாகச் சொன்னார்கள். " வீட்டிலே ஒரு கிண்ணத்தில் தண்ணீரை வைத்தால் வேலை கிடைக்கும். ஒரு கண்ணாடியை எடுத்தால் போதும், நல்லது நடக்கும். வாசல் கதவில் சிறிய உருவங்களைப் பொருத்தினால் தீயவை உள்ளே நுழையாது என்பதெல்லாம் அப்போது ஆச்சர்யமாகப்பட்டது" என்றார்கள். அவர்கள் இதுபோன்ற நம்பிக்கையில் வைத்திருந்த பொம்மைகளில் ஒன்று ஆமை! 'பொம்மை' ஆமை நுழைந்த வீட்டுக்குள் ஒன்றும் ஆகாது போல.

- ஆதர்ஷ்



## அய்யனுக்கு ஆலயம்!

கேரள மாநிலத்தில், எர்ணாகுளத்திலிருந்து 40 கிலோ மீட்டரிலுள்ள தட்டான்படி என்ற கிராமத்தில் திருவள்ளுவருக்குக் கோவில் எழுப்பப்பட்டுள்ளது. கோவிலை நிர்மாணித்தவர் 'சிவானந்தர்'. இவரது முயற்சியால், இதுவரை திருவள்ளுவருக்கு 42 கோவில்கள் எழுந்துள்ளன.

- இரா.சக்கரபாணி, மதுரை

# நாகையா; தியாகய்யா; புதுசய்யா!

**ப**ழம் பெரும் திரைப்பட நடிகர் சித்தூர் நாகையாவை நினைவிருக்கிறதா? 1944ம் வருஷம் மழை கொட்டிய ஓர் இரவில் அவர், மைலாப்பூரிலிருந்து, தி.நகரில் இருந்த தமது வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்தபோது, பஸ் ஸ்டாப் ஒன்றில் சில பெண்மணிகள் காத்திருப்பதைப் பார்த்து, பரிதாபப்பட்டு, காரை நிறுத்தினார். அந்தப் பெண்மணிகள், மைலாப்பூரில் கச்சேரிக்கு வந்துவிட்டு, வீடு திரும்ப பஸ்ஸுக்குக் காத்திருந்ததாகச் சொன்னார்கள்.

அவர்களை மாம்பலத்தில் இறக்கிவிட்ட கணமே, மாம்பலம்வாசிகள் கச்சேரிகள் கேட்க வசதியாக, மாம்பலத்திலேயே ஓர் அரங்கம் தேவை என்று முடிவு செய்தார் கர்நாடக இசைத் திறமை மிகுந்த நாகையா. தம்மைப் போன்ற கலா ரசிகர்கள் ஒரு சிலரை ஒருங்கிணைத்து தியாகய்யரின் பேரிலேயே 'தியாக பிரம்ம கான சபா' என்று ஒரு சபாவை ஆரம்பித்தார். சபா நிகழ்ச்சிகளை நடத்த அரங்கம் கட்டும் பணியிலும் ஈடுபட்டார்.

ஜி.என். (செட்டி) சாலையில் பத்து கிரவுண்டு நிலத்தை, குத்தகைக்கு எடுத்து, கலைகளை வளர்க்கும் நோக்கத்துடன் உருவாக்கப்பட்ட அரங்கிற்குச் சூட்டப்பட்ட பெயர்தான் வாணி மகால்.

**ஆ**ரம்பக் காலத்தில் ஆயுள் சந்தா நூறு ரூபாய், நிகழ்ச்சிகளுக்கு டிக்கெட் விலை பன்னிரண்டு அணா, ஒரு ரூபாய் மற்றும் ஒன்றரை ரூபாய்.

1945 நவம்பர், பதினெட்டாம் தேதி அப்போதைய திருவாங்கூர் சமஸ்தான திவான் சி.பி. ராமசாமி ஐயர் துவக்கி வைக்க, முதல் கச்சேரி அரியக்குடியுடையது.

வாணி மகாலில் கச்சேரி செய்யாத வித்வான்கள் கிடையாது. குன்னக்குடி வாணி மகால், ரொம்ப அதிர்ஷ்டமானது என்று கருதுவதால் ஆண்டுதோறும் ஜனவரி முதல் தேதி இங்கேதான் கச்சேரி செய்கிறார்.

இங்கே நாட்டிய அரங்கேற்றம் செய்து, பின்னர் இந்தி சினிமாவில் பிரபலமானவர் வஹிதா ரஹ்மான். இங்கே நாடகங்களில் நடித்திருக்கும் ஜெயலலிதா, நடன நிகழ்ச்சிகளும் வழங்கியிருக்கிறார்.



• நாகையா

**த**ற்போது வாணி மஹால், புதிய பூச்சுடன் அழகு படுத்தப்பட்டுள்ளது. டிசம்பர் ஒன்பதாம் தேதி திறந்து வைக்கப்படவிருக்கும் வாணி மகால் புதிய வளாகத்தில் பெரிய ஏ.சி அரங்கம், ஒரு மினி ஹால், நூதன கேன்டீன். சென்டிமென்டாக, பழைய மேடையையும், பின் சுவரையும் இடிக்காமலேயே புதுக் கட்டடத்தை நிர்மாணித்துள்ளனர். முகப்பில் பழைய சரஸ்வதி சிலைக்குப் பதிலாக புத்தம்புதுசாய் ஒரு சிலை வைக்கப்பட்டுள்ளது.



- மௌலி

படம்: ஸ்ரீஹரி

**தோற்பதற்கும் விட்டுக்கொடுப்பதற்கும்**
**நிறைய வித்யாசமிருக்கிறது**
**தோற்ற பிறகு விட்டுக் கொடுப்பது**
**தியாகம்**
**தோற்கக் கூடாதென விட்டுக் கொடுப்பது**
**நேசம்**
**நான் தோற்க நினைக்கிறேன்**
**நீ விட்டுக் கொடுக்கிறாய்**

இன்பத்தின் வகை இரண்டென்கிறார்கள். முதலாவது சிற்றின்பம் மற்றது பேரின்பம். ஒன்றில் ஒட்டிக்கிடப்பது சிற்றின்பம். ஒன்றிலும் ஒட்டாதிருப்பது பேரின்பம். பேரின்ப வாசலை அடைவதற்கு சிற்றின்ப வீதியைக் கடந்தாக வேண்டும். கடந்தவர்கள் ஞானிகள்.

ஒன்றின்மீது அளவுக்கதிகமான பற்றை வைக்கும்போது அதை இழக்க நேர்வதுண்டு. அத்தகைய இழப்பால் அடைகிற துயரம் அளவில்லாதது. "நினைக்கும்போது பற்றற்று நிற்கும் திறமை நம்மிடத்தில் இருக்குமானால் துயரம் அண்டாது" என்பார் விவேகானந்தர். ஆனால், பற்றற்று போகிற போதுதான் காதலில் துயரம் நுழைகிறது. ஆண்டவனிடத்தில் பற்று கொண்டு எழுதப்பட்ட பக்தி இலக்கியத்தில் மோனத்தின் உச்சமும், ஞானத்தின் மிச்சமும் நிரம்பிக் கிடக்கின்றன.

**நம் வானத்தில்**
**எப்போதும்**
**மூன்று நட்சத்திரங்கள்**
**ஒன்று நான்**
**ஒன்று நீ**
**ஒன்று யாரென்று அறிய**
**ஒருபோதும் விட்டதில்லை**
**உன்னை நானும்**
**என்னை நீயும்.**

அந்த மூன்றாவது நட்சத்திரம் இதை எழுதிய வஸந்த் செந்திலுக்கு மட்டுமல்ல யாருக்குமே அகப்படாத ஒன்றுதான். ஒன்றிலிருந்து ஒன்றைக் கண்டுபிடிக்கிற முயற்சி விஞ்ஞானத்தில் சாத்தியம். ஒன்றிலிருந்து ஒன்று தொலைந்து போவது காதலின் பாக்கியம்.

எங்கிருந்து தொடங்குவது இந்தக் கடிதத்தை..? எதிலிருந்து தீட்டுவது இந்த ஓவியத்தை? எந்தப் பக்கத்திலிருந்து செதுக்குவது இந்தப் பாறையை? யாதொரு புள்ளியும் அகப்படாமல் ஏங்குகிற நிமிடங்கள் காதல் வாய்க்கும் அற்புத நிமிடங்கள், ஒரு கைக்குட்டை கொடுத்துவிட்டு மொத்த இதயத்தையும் எடுத்துக் கொண்டு போனவள், மறுபடியும் இந்த வீதியில் எப்போது வருவாள்?

**என்னுயிர் நீ என்னுயிர்க்கோர் உயிரும்நீ என்**
**இன்னுயிர்க்குத் துணைவன் நீ என்னை ஈன்ற**
**அன்னைநீ என்னுடைய அப்பன் நீ என்**
**அரும் பொருள் நீ என் இதயத்து அன்பும் நீ**
**என் நன்னெறி நீ எனக்குரிய உறவும்நீ என்**
**நற்குரு நீ எனைகலந்த நட்பும் நீ என்**
**றன்னுடைய வாழ்வும்நீ என்னைக் காக்கும்**
**தலைவன்நீ கண்மூன்று தழைத்த தேவே**

*(மகாதேவ மாலை / திருவருட்பா)*

## யுகபாரதி

இறைவனுக்கு மூன்று கணகள். காதலுக்கோ நான்கு; அந்த நான்கும் ஒரே திசையைப் பார்க்கும் தீவிரம் கொண்டவை. உயிருக்குள் உயிராகும் இன்னுயிரை, கரைத்துப் போவதும் உன் பொறுப்பு என்று விட்டுவிட முடிகிறதா? பார்க்கும் திசையெல்லாம் நின்னையே பார்க்கின்ற; கேட்கும் மொழியெல்லாம் நின் மொழியைக் கேட்கின்ற நிலையைக் காதல் உண்டாக்குகிறது.

எங்கேயோ பார்த்ததுபோலத் தோன்றுகிற முகமாக பார்த்தவுடன் தோன்றும். நேரம் கேட்பதுபோல் கடிகாரமில்லாத அவனிடத்தில் நெருங்குவான் ஒருவன். கேட்க நினைத்தது நேரமுமில்லை. அவன் பதில் பேசாமல் திரும்பிப் போனது கோபமுமில்லை. அதற்கிடையில் ஒன்று ஒளிந்திருக்கிறது. அந்த ஒன்றை நட்பென்று, உற



## இரும்பு இவருக்குத் துரும்பு!

இலங்கையைச் சேர்ந்த காமினி வசந்தகுமாரா எவ்வளவு பெரிய இரும்புக் கம்பியையும் தன்னுடைய பல்லாலே கடித்து இரண்டாக்கக் கூடிய சக்தியைப் பெற்றிருக்கிறார். சமீபத்தில் இவருடைய சாதனையை கின்னஸ் நூல் அதிகாரிகள் முன்னிலையில் செய்து காட்டி பரிசு பெற்றதுடன் தம்முடைய பெயரையும் கின்னஸ் நூலில் பதிய வைத்திருக்கிறார்.

- பாரிஸ் பார்த்தசாரதி

வென்று, பிரிவென்று எப்படி வேண்டுமானாலும் அழைத்துக் கொள்ளலாம். பிறிதொரு சந்தர்ப்பத்தில், நேரம் சொல்லாது முகம் திருப்பிப் போனவன் நேரம் கேட்க வருவான். நேரத்திற்குப் பதிலாக வேறொன்றும் கேட்பாள்.

**எனக்கும் உனக்கும் இசைந்த**
**பொருத்தம்**
**என்ன பொருத்தமோ - இந்தப்**
**பொருத்தம் உலகில் பிறருக்கெய்தும்**
**பொருத்தமோ?**
**......**
**நினைக்க நினைக்க தித்திப்பெனது**
**நினைவிற் கொடுக்குதே**
**நின்பாலன்றிப் பிறர்பாற்செல்ல**
**நெஞ்சம் நடுக்குதே**
**எனைத் துன்பொழித்தாட் கொண்ட**
**நின்னை அன்னையென்பேனோ**
**எந்தாயன்பிலே னின்னடிக்கு**
**முன்னையன்பனோ**

*(கீர்த்தனை / திருவருட்பா)*

ஒருவரைப் பற்றி நினைத்துக் கொண்டிருக்கும்போது தொலைபேசி அலறுகிறது. எடுத்தால் நினைத்தவர் பேசுகிறார். மனசில் ஒருவித பரவசம் மேலிடும். அந்தப்பரவசம் எதனால் வருகிறது? ஒருவரைப்பற்றி நினைத்தவாரே நடந்து போகிறோம். வீதியில் சட்டென்று எதிர்ப்படுகிறார். முகமுழுதும் மலர்களை அள்ளித் தெளிப்பதைப் போலொரு உணர்வு. அந்த உணர்வுக்கு என்ன பெயர்? நாம் நினைப்பது போலெல்லாம் நடந்துவிட்டால் தெய்வமில்லை என்கிற திரைப்பாடல் ஞாபகத்தை மூட்டுகிறது.

எனக்கும் உனக்குமான உறவு முடிச்சைக் காலம் போடுகிறது. பிறகு காலமே அவிழ்க்கிறது. பிரியப்பட்டு நாமும் அந்த முடிச்சில் சிக்கிக் கொள்வதில் ஆனந்தப்படுகிறோம். நினைக்க நினைக்க தித்திக்கின்ற; வேறு நினைவு தொட்டுக் கொள்ளாத தேவரகசியத்தை, பக்தி இலக்கியம் எங்கிலும் பார்க்க முடிகிறது.

**இன்பம் வேண்டித்**
**துன்புறல் அறிவு**
**துன்பம் வேண்டி**
**இன்புறல் அன்பு** - ச.து.சு. யோகியாரின் காதல் தேன், சுவைக்க சுவைக்க தெவிட்டாதது. சுத்தமான எழுத்துக்கு, வித்தக எழுத்துக்கு உதாரணமாகவும் திகழ்ந்தவர்.

**இருப்பதும் இல்லதும்**
**காதலின் இழைவு**
**இருப்பதும் இல்லதும்**
**கழிந்திடில் இன்பம்**

- இருப்பதும் இல்லதும் என்கிற இரண்டுமே காதலின் இழைவு என்றெழுதும் யோகியார் இன்னொரு இடத்தில் உமர் கய்யாமின் ருபாயத்தை இப்படி வடித்துக் காட்டுகிறார்.

**உள்ளதும் இல்லதுவும்**
**உள்ளும் புறமும் எலாம்**
**தெள்ளத் தெளியக்**
**தெரிவிப்பேன் என்றாலும்,**
**உள்ளத்தாலே ஒருவன்**
**உணரும் கலைகளிலே**
**கள்ளைப் போல் வேறொன்றில்**
**ஆழ்ந்தில்லேன், காணீரோ!**

காதலின்பத்தைக் கடைசியில் கள்ளில் தேடிப் போகிறவன் மெய்யான காதலனா? காதலின்பத்தைக் காணாத பெண் என்ன அருந்துகிறாள்? மெல்ல மெல்ல மரித்துப் போகச் செய்யும் மதுவைவிட, மொத்தமாய் மரித்துப் போகவே விரும்புகிறாள் காதலி. அது அரளி விதையா? தூக்க மாத்திரையா? பாலிடாயிலா? தூக்குக் கயிறா? ஏதோவொன்று கிடைத்துவிடுகிறது. காதல் கைகூடாவிட்டால் செத்துத்தான் போக வேண்டுமா? ஒரே ஒரு முறைதான் காதல் பூக்குமா? ஒரு தடவை மட்டுமே பூக்குமெனில் அது காதலில்லை என்போம். பிசாசுகளின் கைகளில் காதலிருக்கிறது. கைகளற்ற காதலில் பிசாசுகளின் நகக் கீறல்கள். அந்தக் கீறல்கள் ஓவியமாகத் தெரிவதுதான் காதலின் கௌரவம். அந்த நாட்டுப்புறத்துக் காதலியின் இமைகள் படபடத்தன.

(தொடரும்)

அம்மா காலையிலிருந்தே பரபரப்பாக இருந்தாள். காரணம், கிட்டத்தட்ட மூன்று வருடப் பிரிவுக்குப் பிறகு, ரவி இன்று வருகிறான்.

ரவி, என்னுடன் படித்தவன். மிக நெருங்கிய நண்பன். இப்படிச் சொல்வதைவிட என் அம்மாவுக்கு அவன் இன்னொரு பிள்ளை என்று சொல்வதுதான் சரியாக இருக்கும். என்னைவிட அவனைத்தான் அம்மாவுக்கு ரொம்பப் பிடிக்கும். அவனுக்கு என்ன வேண்டும், எது எது பிடிக்கும் என்று கேட்டுக் கேட்டுச் செய்வாள்.

எங்கள் தெருவிலேயே நான்கு வீடு தள்ளி, தனது மாமா வீட்டில் தங்கிப் படித்து வந்தான் ரவி. அவன் மாமா மத்திய அரசு உத்தியோகஸ்தர். டெல்லிக்கு மாற்றம் வர, ரவியை ஹாஸ்டலில் சேர்த்து விட்டு மாமா டெல்லிக்குச் சென்றுவிட்டார்.

ஹாஸ்டலில் தங்கி படித்துக் கொண்டிருந்த ரவிக்கு, ஹாஸ்டல் சாப்பாடும், அந்தச் சூழலும் ஒத்துக் கொள்ளாமல் உடம்புக்கு முடியாமல் போய்விட்டது. அவனை வீட்டுக்கு அழைத்து வந்தேன். ஒரு வாரம் தங்கியிருந்தான். அம்மா அவனை நன்றாகக் கவனித்துக் கொண்டாள். உடம்பு தேறியது. எங்களுடன் சகஜமாகப் பழகினான்.

அன்றிலிருந்து அவன் ஹாஸ்டலுக்குப் போகவில்லை. எங்களுடனே தங்கிக்கொண்டான். நானும் அவனும் வீட்டிலிருந்தபடியே கல்லூரிக்குச் சென்று வந்தோம். படிப்புக்காகவும் ஹாஸ்டல் செலவுக்காகவும் மாமா அனுப்பும் பணத்தை, அப்படியே அம்மாவிடம் கொடுத்து விடுவான்.

எங்கள் இருவருக்கும் படிப்பு முடிந்தது. அடுத்த ஒரு வருஷத்துக்குள்ளாகவே, அவனுடைய மாமாவுக்குத் தெரிந்த ஒரு பெரும்புள்ளியின் சிபாரிசில், அவனுக்கு மும்பையில் பெரிய கம்பெனியில் வேலை கிடைத்தது.

# நம்ம வீட்டுப் பிள்ளை!

இன்று அவன் வருகிறான். ரவி வருவதை எண்ணி எண்ணி மகிழ்ந்து போனாள் அம்மா. அவனுக்கு என்னென்ன பிடிக்கும் என்று யோசித்து யோசித்து விருந்து சமைந்தாள்.

ரவியை அழைத்து வர விமான நிலையத்துக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தேன்.

அம்மா சொன்னாள் என்னிடம், "ரவி தம்பி இப்போ நல்ல நிலையிலே இருக்கு. அதுங்கிட்ட சொல்லி உனக்கு ஏதாவது வேலைக்கு ஏற்பாடு செய்யச் சொல்லிக் கேளேன். நம்மிடம் இருந்த பிள்ளை, சொன்னால் கேட்கும்."

"அம்மா, என்னைவிட உன்னைத்தான்மா அவனுக்கு ரொம்பப் பிடிக்கும். உன் சொல்லைத் தட்டவே மாட்டான். நான் அவன்கிட்ட கோரிக்கையா கேக்கறதைவிட, நீ உரிமையா கேட்கலாம்" என்று நான் சொன்னதும் அம்மா முகத்தில் பெருமையும் சந்தோஷமும் தெரிந்தது.

விமான நிலையத்திலிருந்து அவனை அழைத்து வந்தேன். வந்ததும் அம்மா காலில் விழுந்து வணங்கினான் ரவி.

"அய்யோ என்னப்பா இது?" என்று ஏதோ தப்பு செய்ததுபோல் பதறினாள் அம்மா.

"ஏம்மா, இது நீங்க வளர்த்த உடம்பு. நான் உங்க பிள்ளை. இன்னிக்கு இப்படியிருக்கேன்னா எல்லாம் உங்க உழைப்பு... கவனிப்பு" என்று ரவி சொன்னதும் ஆனந்தக்கண்ணீர் அருவியாய்க் கொட்டியது அம்மாவுக்கு. மன செல்லாம் மகிழ்ச்சி.

"மாமாவைப் பார்க்க இனிமேல்தான் போகணும். நீங்கதான் முதல். எனக்கு இது தான் தாய்வீடு' என்றான்.



மீனா சுந்தர்

அம்மாவுக்குப் புடைவையும் ஒரு தங்கச்சங்கிலியும் வாங்கி வந்திருந்தான். அடுத்து எனக்கு ஏதாவது பெட்டியிலிருந்து எடுத்துக் கொடுப்பான் என்று எதிர்பார்த்து அம்மா ஏமாந்து போனாள்; நானும் தான்.

அவன் பேச்சில் வசீகரமும் பணக்கார வாசமும் இருந்தது. அவன் உள்ளே வந்ததுமே அயல்நாட்டு சென்ட் மணம் வீடெங்கும் நிறைந்தது. ஆடைகள் நவீனம். ஷூவில் முகம் பார்க்கும் பளிச்.

"பெரிய கம்பெனி.. முழுதும் ஏ.ஸி... தனி ரூம்... எனக்கு மூன்று தனி உதவியாளர்கள்... அதில் இரண்டு பேர் பெண்கள். மாதத்தில் பதினைந்து நாட்கள் விமானப் பயணம். கார், பங்களா, வேலையாள், இத்யாதி... இத்யாதி..." நிறைய தன்னைப் பற்றியும், தான் இருக்கும் சூழ்நிலையைப் பற்றியும் சொன்னான். சொல்லிக்கொண்டேயிருந்தான்.

அம்மா அவனுக்குப் பிடித்த சமையல் செய்திருந்தாள். சாப்பிட்டுவிட்டுச் சற்று, ஓய்வெடுத்துக்கொண்டு மாலையில் புறப்பட்டான். ரவி அவனை வழியனுப்பி விட்டு வீட்டுக்கு வந்தான்.

வந்ததும் அம்மா கேட்டாள், "ஜெகன், உன் வேலைக்காகக் கேட்டியா?"

"இல்லைம்மா."

"ஏன்? அவன்கிட்டே ரொம்ப நேரம் பேசிட்டிருந்தியே, கேட்டிருக்கலாமே."

"கேட்கலைம்மா. என்னமோ தெரியலை. கேட்க முடியலை. நீ ஏம்மா கேட்கலை?"

"உன்னால ஏன் கேட்க முடியாம போச்சோ, அதேதான் எனக்கும்."

அம்மா சமையலறை பக்கம் சென்றாள். ○

# சிவகாமியின் சபதம்

## இருபத்து மூன்றாம் அத்தியாயம்

## அபயப் பிரதானம்

"சிவகாமி! மெய்யாகவே நீதானா? அல்லது என் கண்கள் என்னை ஏமாற்றுகின்றனவா?" என்று நாகநந்தியடிகள் போலி அவநம்பிக்கையுடன் கேட்டார்.

"அடிகளே! நான்தான்; அனாதைச் சிவகாமிதான்; இந்த ஏழைச் சிற்பியின் மகளைக் காப்பாற்றுங்கள் சுவாமி!"

"அப்படிச் சொல்லாதே, அம்மா! நீயா அனாதை? நீயா ஏழை? பல்லவ ராஜ்யத்தின் குமார சக்கரவர்த்தி மாமல்லப் பிரபுவின் காதலுக்குரிய பாக்கியசாலியல்லவா நீ? மண்டலாதிபதியான மகேந்திர பல்லவரின் மருமகளாகப் போகிறவளல்லவா?"

"சுவாமி! என்மேல் பழி தீர்த்துக் கொள்ள இது சமயமல்ல! தங்களை ரொம்பவும் வேண்டிக் கொள்கிறேன். காப்பாற்ற வேண்டும்" என்று சிவகாமி அலறினாள்.

"பெண்ணே! காவித் துணி தரித்த ஏழைப் பரதேசி நான்! என்னால் உன்னை எப்படிக் காப்பாற்ற முடியும்?"

"தங்களால் முடியும், சுவாமி! தங்களால் முடியும்! தாங்கள் மனது வைத்தால் கட்டாயம் காப்பாற்ற முடியும்."

"இவர்களிடம் நீ எப்படிச் சிக்கிக் கொண்டாய்? கோட்டைக்குள்ளிருந்து ஏன் வெளியே வந்தாய்? எப்படி வந்தாய்?"

"அதையெல்லாம் இப்போது கேட்க வேண்டாம். சுவாமி! மூடத்தனத்தினால் வெளியே வந்தேன். என் அருமைத் தந்தைக்கு நானே யமனாக ஆனேன்...! நான் எக்கேடாவது கெட்டுப் போகிறேன். என் தந்தையைக் காப்பாற்றுங்கள்...!"

"உன் தந்தை எங்கே, அம்மா? அவருக்கு என்ன ஆபத்து வந்திருக்கிறது?" என்றார் பிக்ஷு.

"ஐயோ! இவர்களைக் கேளுங்கள். அப்பா எங்கே என்று இவர்களைக்

**அமரர் கல்கி**

கேளுங்கள்! சற்று முன்னால் ஏதோ பயங்கரமான வார்த்தை என் காதில் விழுந்தது. அதோ அந்தக் குதிரை மேல் இருப்பவர் சொன்னார். ஆயனர் எங்கே என்று அவரைக் கேளுங்கள். சுவாமி! சீக்கிரம் கேளுங்கள்!"



ப்படிச் சிவகாமி சொல்லிக் கொண்டிருந்தபோதே சற்றுப் பின்னால் குதிரை மேல் வீற்றிருந்தபடி மேற்கூறிய காட்சியைக் கவனித்துக் கொண்டிருந்த தளபதி சசாங்கன் குதிரையைச் செலுத்திக் கொண்டு அவர்கள் அருகில் வந்து சேர்ந்தான்.

"புத்தம் சரணம் கச்சாமி!" என்று நாக நந்தியைப் பார்த்துப் பரிகாசக் குரலில் கூறி வணங்கினான்.

வாதாபிச் சக்கரவர்த்தியிடம் நாக நந்தி பிக்ஷுவுக்கு இருந்த செல்வாக்கைக் குறித்துப் பொறாமை கொண்டவர்களில் தளபதி சசாங்கனும் ஒருவன்.

"புத்தம் சரணம் கச்சாமி!" என்று நாகநந்தியும் கடுகடுத்த குரலில் கூறினார்.

"ஆ! நாகநந்தி பிக்ஷுவே! திடீரென்று இங்கே எப்படி முளைத்தீர்? நாகம் இத்தனை நாளும் எந்த வளையில் ஒளிந்து கொண்டிருந்தது? இப்போது ஏன் வெளியில் தலையை நீட்டுகிறது?" என்று தளபதி சசாங்கன் கேட்டான்.

கேட்டவர்கள் நடுங்கும்படியான நாகப்பாம்பின் சீறல் சத்தம் அப்போது திடீரென்று கேட்டது.

அதே சமயத்தில் "பாம்பு! பாம்பு!" என்று ஒரு கூக்

குரல். அதைக் கேட்ட அங்கே கூடியிருந்த வீரர்கள் சிதறி ஓடினார்கள்.

நாகப்பாம்பு ஒன்று சரசரவென்ற சப்தத்துடன் தளபதி சசாங்கன் ஏறியிருந்த குதிரையின் கால் மீதேறி ஊர்ந்து அப்பாலிருந்த புதருக்குள் விரைந்து சென்று மறைந்தது.

''தளபதி! ஜாக்கிரதை! சாதாரணமாய் நாகப்பாம்பு கடிக்காது. ஆனால் கடித்துவிட்டால் அதன் விஷம் ரொம்பப் பொல்லாதது!'' என்றார் பிக்ஷு.

சசாங்கன் பல்லைக் கடித்துக்கொண்டு, ''பிக்ஷு... இந்த அருமையான உண்மையைச் சொன்னதற்காக மிகவும் வந்தனம். எனக்கு அலுவல் அதிகம் இருக்கிறது. தங்களுடன் பேசிக்கொண்டிருக்க இப்போது நேரமில்லை. மன்னிக்க வேண்டும்... அடே! இந்தப் பெண்ணைப் பிடித்துக் கட்டுங்கள்!'' என்று சற்று விலகிப் போய் நின்ற வீரர்களைப் பார்த்துச் சசாங்கன் சொன்னான்.

அதைக் கேட்ட வீரர்கள் சிவகாமியை நெருங்கி வந்தார்கள்.

''தளபதி! தென்னாட்டின் புகழ் பெற்ற நடன கலைவாணியைச் சிறைப் பிடித்தது உம்முடைய அதிர்ஷ்டந்தான். இந்த விசேஷ சம்பவத்தைச் சக்கரவர்த்தியிடம் நான் கூடிய சீக்கிரம் தெரியப்படுத்துகிறேன்...''

''ஓஹோ! அப்படியானால் பிக்ஷுவும் வாதாபியை நோக்கித்தான் பிரயாணம் கிளம்பியிருப்பது போல் தெரிகிறது...''

''ஆம், சசாங்கரே! ஆனால் சக்கரவர்த்தியிடம் இந்த விசேஷச் செய்தியைத் தெரிவிப்பதற்கு வாதாபி வரையில் நான் போக வேண்டியதில்லை. சற்று முன்னால் இந்தக் காட்டில் இன்னொரு புறத்தில் சக்கரவர்த்தியைப் பார்த்தேன்...''

''பொய்! பொய்! வாதாபிச் சக்கரவர்த்தி இதற்குள் வடபெண்ணை நதியை அடைந்திருப்பார்.''

''பொய்யும் மெய்யும் விரைவிலே தெரியும், தளபதி! ஆனால் ஒரு விஷயத்தை ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். புலி தனக்கு இரையாகக் கொள்ள எண்ணிய மானின் மீது பூனை கண்ணைப் போட்டால் விபரீதம் விளையும். ஞாபகமிருக்கட்டும்!'' என்று நாகநந்தி கம்பீரமான குரலில் கூறிய போது, தளபதி சசாங்கனின் வாயிலிருந்து 'உம்', 'உம்' என்ற உறுமல் ஒலியைத் தவிர வேறெதுவும் வரவில்லை.

பின்னர், நாகநந்தி சிவகாமியைப் பார்த்து, ''பெண்ணே! நான் சொல்வதைக் கவனமாகக் கேள். அதன்படி நடந்துகொண்டால் உனக்கு ஒரு அபாயமும் நேராது. இவர்களுடன் தடை சொல்லாமல் போ! நீ நடனக் கலை பயின்றவளாதலால், உன் கால்களில் வேண்டிய பலம் இருக்கும். நடப்பதற்கு நீ அஞ்ச மாட்டாயல்லவா?'' என்றார்.



துவரை சசாங்கனுக்கும் நாகநந்திக்கும் நடந்த சம்பாஷணையைக் கவனித்த வண்ணம் கற்சிலைபோல் அசைவற்று நின்ற சிவகாமி சட்டென்று உணர்வு வரப் பெற்றவளாய், ''சுவாமி! என்னைப் பற்றி எனக்கு ஒரு கவலையுமில்லை. இந்தப் பாவியினால் தங்கள் சிநேகிதர் ஆயனர் பெரும் அபாயத்துக்கு உள்ளாகி விட்டார். ஐயோ! அவரைக் காப்பாற்றுங்கள்!'' என்று கதறினாள்.

உடனே நாகநந்தி பிக்ஷு, ''தளபதி! இந்தப் பெண்ணின் தந்தை எங்கே?'' என்று கேட்க, சசாங்கன் ஒரு கோரச் சிரிப்புச் சிரித்தவண்ணம், ''ஆஹா! உங்களுக்கு அது தெரிய வேண்டுமா? சொல்கிறேன். பல்லவ நாட்டிலுள்ள சிற்பிகளையெல்லாம் ஒரு காலையும் ஒரு கையையும் வெட்டிப் போடும்படி சக்கரவர்த்தியின் கட்டளை; இவளுடைய தந்தை பெரிய மகா சிற்பியல்லவா? அதற்காக அவருக்கு மரியாதை செய்யும் பொருட்டு இரண்டு கையையும் இரண்டு காலையும் வெட்டிப் போடச் சொல்லியிருக்கிறேன்! அதோ தெரியும் அந்தப் பாறைமேல் கொண்டு போய் சுற்றுப் பக்கமெல்லாம் தெரி

யும்படியாகக் காலையும் கையையும் வெட்டிக் கீழே உருட்டி விடச் சொல்லியிருக்கிறேன். காஞ்சிக் கோட்டை மதிலிலிருந்து பார்ப்பவர்களுக்குத் தெரிய வேண்டுமென்றுதான் பாறை உச்சிக்குக் கொண்டு போகச் சொன்னேன்''



என்றான் சசாங்கன்.

இவ்விதம் சொல்லிவிட்டு மீண்டும் அவன் பயங்கரமாகச் சிரித்தான்.

சசாங்கன் பேசுகிற வரையில் அவனுடைய முகத்தையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்த சிவகாமி அவன் பேசி முடித்ததும், விவரிக்க முடியாத பயங்கரமும் வேதனையும் நிறைந்த கண்களினால் நாகநந்தியைப் பார்த்து, ''அடிகளே!'' என்று கதறினாள்.

அப்போது நாகநந்தி, ''பெண்ணே! என் வார்த்தையில் நம்பிக்கை வை. உன் தந்தையை நான் காப்பாற்றுகிறேன். மனநிம்மதியுடன் நீ இவர்களோடு போ!'' என்றார்.

அப்போது சசாங்கன், ''பிக்ஷு! வாதாபிச் சக்கரவர்த்தியின் கட்டளைக்குக் குறுக்கே நிற்பவருக்கு என்ன தண்டனை தெரியுமல்லவா? அது தங்களுக்கும் ஞாபகம் இருக்கட்டும்!'' என்று

கூறி விட்டுச் சிவகாமியைப் பார்த்து, "பெண்ணே! இந்தப் பிக்ஷு உனக்குச் சொன்ன புத்திமதி நல்ல புத்திமதிதான். அதன் பிரகாரம் தடை ஒன்றும் சொல்லாமல் எங்களுடன் வந்து விடு!" என்றான்.



இருபத்து நான்காம் அத்தியாயம்

# அட்டூழியம்



யனாரின் உள்ளம் சிந்தனா சக்தியை அடியோடு இழந்திருந்தது. தன் கண்ணால் பார்த்தது, காதால் கேட்டது ஒன்றையுமே அவரால் நம்ப முடியவில்லை. இவையெல்லாம் கனவிலே நடக்கும் நிகழ்ச்சிகளா, உண்மையில் நடக்கும் சம்பவங்களா என்பதையும் அவரால் நிர்ணயிக்கக் கூடவில்லை!

உலகத்தில் மாநிலத்தை ஆளும் மன்னர்கள் யுத்தம் செய்வது இயற்கைதான். அதில் நம்ப முடியாதது ஒன்றுமில்லை. அப்படி யுத்தம் செய்யும் அரசர்கள் போருக்கு அனுப்பும் வீரர்களுக்கு, "ஸ்திரீகளையும், குழந்தைகளையும், வயோதிகர்களையும், பசுக்களையும், கலைஞர்களையும் ஹிம்சிக்கக்கூடாது!" என்று கட்டளையிடுவதுண்டு. அரசர்கள் பொல்லாத மூர்க்கர்களாயும், கருணையற்றவர்களாயுமிருந்தால், அவ்வளவு சிரத்தை எடுத்துக் கட்டளையிட மாட்டார்கள்.

ஆனால், சாம்ராஜ்யம் ஆளும் சக்கரவர்த்தி ஒருவர் தம் படை வீரர்களுக்கு, 'சிற்பிகளையெல்லாம் காலையும் கையையும் வெட்டிப் போட்டுவிடு!' என்று ஆக்ஞை இடுவது நடக்கக்கூடிய சம்பவமா? அம்மாதிரிக் கட்டளையிடக் கூடிய ராட்சதர்கள் இராஜ்ய சிம்மாசனத்தில் ஏறி வீற்றிருக்க முடியுமா? அந்த நாட்டின் பிரஜைகள் அதைப் பொறுத்துக் கொண்டிருப்பார்களா?

அதிலும் புலிகேசிச் சக்கரவர்த்தியா அப்படிப்பட்ட கட்டளை பிறப்பித்திருப்பார்? எவருடைய இராஜ்யத்தில் உலகத்திலேயே இல்லாத கலை அதிசயங்கள் - என்றும் அழியாத வர்ணங்களில் தீட்டப்பட்ட அற்புத ஜீவ சித்திரங்கள் - உள்ளனவோ, அந்த இராஜ்யத்தின் மன்னரா அப்படிப்பட்ட கொடூரமான கட்டளையை இட்டிருப்பார்? அப்படி அவர் கட்டளையிட்டிருப்பதாக அந்தக் குரூர முகம் படைத்த தளபதி கூறியது உண்மையாயிருக்க முடியுமா? அவன் சொன்னதாகத் தம் காதில் விழுந்தது மெய்தானா?

அவனுடைய கொடூர மொழிகளைக் கேட்டுச் சிவகாமி உணர்விழந்து தரையில் விழுந்தது உண்மையா? அவளைத் தாங்கிக் கொள்ள தாம் ஓடியபோது வாதாபி வீரர்கள் தங்களுடைய இரும்புக் கரங்களினால் தம்மைப் பிடித்துக் கொண்டதும் உண்மையாக நடந்ததுதானா? பிறகு அந்தப் படைத் தலைவன் இட்ட கட்டளை மெய்தானா? 'அதோ அந்தப் பாறைமுனைக்கு அழைத்துப் போய்க் கோட்டையிலுள்ளவர்களுக்குத் தெரியும்படி காலையும் கையையும் வெட்டிக் கீழே உருட்டி விடுங்கள்!' என்ற மொழிகள் தாம் உண்மையாகக் கேட்டவைதானா?

அல்லது இவ்வளவும் ஒரு பயங்கரக் கனவில் நடந்த சம்பவங்களா? இந்தப் பாறை மீது தாம் ஏறுவதும், தம் கால்கள் களைத்துத் தள்ளாடுவதும் நிஜமா? அல்லது வெறும் சித்தப் பிரமையா?

இவையெல்லாம் வெறும் பிரமைதான்! அல்லது கனவுதான். ஒருநாளும் உண்மையாக இருக்க முடியாது.

ஆனால், அதோ தெரிகிறதே, காஞ்சிக் கோட்டை, அதுகூடவா சித்தப் பிரமையில் தோன்றும் காட்சி?

இல்லை, இல்லை! காஞ்சிக் கோட்டை உண்மைதான். தம்மைப் பாறை முனையில் கொண்டு வந்து நிறுத்தியிருப்பதும் உண்மைதான்; இதோ இந்த ராட்சதர்கள் தம் கைகளைப் பிடித்துக் கொண்டிருப்பதும், கைகளை வெட்டுவதற்காகக் கத்தியை ஓங்குவதும் நிச்சயமாக நடக்கும் சம்பவங்கள்தான்.

ஆ! சிவகாமி! என் அருமை மகளே! இந்தப் பாவி உன்னை என்ன கதிக்கு உள்ளாக்கிவிட்டேன்! என் அஜந்தா வர்ணப் பைத்தியத்துக்கு உன்னைப் பலிகொடுத்து விட்டேனே, ஐயோ! என் மகளே! மகளே!

வீரர்களில் ஒருவன் கத்தியை ஓங்கிய போது ஆயனர் தம் கண்களை இறுக மூடிக் கொண்டார். ஆனால், ஓங்கிய கத்தி அவர் எதிர்பார்த்தபடி அடுத்த கணம் அவருடைய கையை வெட்ட

## அருள்வாக்கு

இந்தக் காலத்தில் பண்டிதர் என்று இருப்பவரையே, ''வேதத்தில் ஒரு பதம் புரிய வில்லை; அர்த்தம் சொல்லுங்கள்'' என்று கேட்டால், ''பாஷ்யத்தைப் பார்த்துக் கொண்டு வந்து பதில் சொல்கிறேன்'' என் கிறார்! காலத்துக்கேற்ப குரு பீடத்தில் நான் இருக்கிறேன்!

அதனால் - ஒருவிதத்தில் - Self interest (ஸ்வயநல அக்கறை) என்று வேண்டுமானா லும் வைத்துக் கொள்ளுங்கள் - குரு பீடங்கள் நல்ல நிலைமை யில் ஸகல சாஸ்த்ரங்களிலும் நல்ல ஞானத் துடன் விளங்கு மென்பதற்காகவா வது ஸகல ஜனங் களும் நல்ல வித்வத் உள்ளவர்களாக ஆக வேண்டுமென்கிறேன். சிஷ்யர்களின் தரத் தைப் பொறுத்துத்தான் குரு உருவாகிறார். சிறந்த அறிவாளிகளாக சிஷ்யர் கூட்டம் இருந்துவிட்டால் அதற்குத் தகுந்தாற்போல் குருவும் தம் நிலையை உயர்த்திக் கொள்ள வேண்டுமென்று நிர்பந்தமாகவாவது ஏற் பட்டு விடுகிறது. அவர்கள் ஒன்றைக் கேட்டு இவர் முழிக்கப்படாதல்லவா? அதனால்! ஆனபடியால் குருபீடங்களி லுள்ள குருமார்கள் நன்றாக சாஸ்த்ரார்த்தம் அறிந்தவர்களாய் இருக்க வேண்டுமென் றால் அதன் பொறுப்பு சிஷ்யர்களதுதான்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீசந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சாரிய சுவாமிகள்**

வில்லை. "நிறுத்து!" என்று அதிகாரக் குர லில் ஓர் ஒலி கேட்டது. ஆயனர் கண் ணைத் திறந்து பார்த்தபோது... ஆஹா! இதென்ன? புலிகேசிச் சக்கரவர்த்தியல் லவா இவர்? இங்கு எப்படி வந்து சேர்ந் தார்?

சக்கரவர்த்தியைப் பார்த்த வியப் பினால் ஆயனரைப் பிடித்துக் கொண் டிருந்த வீரர்கள் திடீரென்று கைப்பிடியை விட்டார்கள். பக்கத்திலிருந்த பள்ளத்தில் ஆயனருடைய கால் நழுவிற்று. கீழே பூமி வரையில் சென்று எட்டிய அந்த மலைச் சரிவில் ஆயனர் உருண்டு உருண்டு போய்க்கொண்டிருந்தார். சிறிது நேரத்துக் கெல்லாம் தம் உணர்வை இழந்தார்.

ஆயனருக்குச் சுய உணர்வு வந்தபோது, அருகில் ஏதோ பெருங் கலவரம் நடப்ப தாகத் தோன்றியது. பல மனிதர்களின் கூச்சலும் கற்கள் மோதும் சத்தமும் கலந்து கேட்டன. முன்னம் கேட்ட அதே அதி காரக் குரலில், "நிறுத்து!" என்ற கட்டளை எழுந்தது.

ஆயனர் கண்களைத் திறந்து பார்த் தார். அரண்ய மத்தியில் இருந்த தமது பழைய சிற்பக் கிருஹத்துக்குள் தாம் இருப் பதைக் கண்டார். சுற்றுமுற்றும் பார்த்தார்; வாதாபிச் சக்கரவர்த்தி கம்பீரமாய் நின்று கையினால், "வெளியே போங்கள்!" என்று சமிக்ஞை செய்ய, மூர்க்க வாதாபி வீரர் கள் கும்பலாக வாசற் பக்கம் போய்க் கொண்டிருப்பதைப் பார்த்தார்.

வீட்டுக்குள்ளே தாம் அரும்பாடு பட்டுச் சமைத்த அற்புதச் சிலைகள் - அழகிய நடன வடிவங்கள் தாறுமாறாய் ஒன்றோடொன்று மோதப்பட்டு அங்க ஹீனம் அடைந்து கிடப்பதைக் கண்டார். அப்போது அவருடைய உடம்பின்மேல் யாரோ ஈயத்தைக் காய்ச்சி ஊற்றுவது போல் இருந்தது. பழுதடைந்த சிலைகளை அருகில் போய்ப் பார்க்கலாமென்று எழுந் தார். அவருடைய வலது காலில் ஒரு பயங் கரமான வேதனை உண்டாயிற்று. எழுந் திருக்க முடியவில்லை. தமது வலது கால் எலும்பு முறிந்து போய்விட்டது என்பது அப்போதுதான் ஆயனருக்குத் தெரிந்தது.

அச்சமயம் பின்கட்டிலிருந்து ஆயனரு டைய சகோதரி உடல் நடுங்க, கண்களில் நீர் பெருக, ஓடிவந்து ஆயனர் அருகில் விழுந்தாள். பாவம் சற்று முன்னால் அந் தச் சிற்பக் கிருஹத்தில் வாதாபி வீரர்கள் செய்த அட்டகாசங்களைப் பார்த்து அவள் சொல்ல முடியாத பீதிக்கு ஆளாகி யிருந்தாள்.

எல்லா வீரர்களும் வீட்டுக்கு வெளியே போன பிறகு, வாதாபிச் சக்கரவர்த்தி சாந் தமாக நடந்து ஆயனர் கிடந்த இடத்துக்கு அருகில் வந்தார். ஆயனர், "பிரபு! தங்களு டைய வீரர்கள் இம்மாதிரி அட்டூழியங் களைச் செய்யலாமா?" என்று கதறினார்.

(தொடரும்)



அன்னமே பிரம்மா! அன்னமே விஷ்ணு! அன்னமே சிவன்!

# புண்ணியக்ஷேத்ரம் இராமேஸ்வரத்தில் மாதந்தோறும் அமாவாஸை திதியில் அன்னதானம் செய்வோம் வாருங்கள்!

அன்புடையீர், அனேக நமஸ்காரம். தலம், தீர்த்தம், மூர்த்தி இவற்றால் சிறப்புக்குரிய பல க்ஷேத்ரங்களில் இராமேஸ்வரம் பெருமைமிக்க புண்ணிய ஸ்தலமாகும். ராமஸேது என்றும், ஸேது ஸ்தலம் என்றும் போற்றப்படும் இராமேஸ்வரம் புகழ்மிக்க புண்ணிய க்ஷேத்ரமாகும். இராமேஸ்வரத்தில் அன்னதானம் செய்வதும் ஜபம், ஹோமம், தானம் செய்வதும் அழியாத புண்ணியப் பலன் கிடைக்கும்.

இராமேஸ்வரத்தில் அமாவாஸை தினத்தில் அன்னதானம் செய்தால் மனித குலம் மாபெரும் புண்ணியத்தை பெறும். புத்திரப்பேறு உண்டாகும். நாகதோஷம் முதலியன நீங்கும். அனைவரும் நலம் பெறுவர். இராமேஸ்வரத்தில் அமாவாஸை அன்று அன்னமளிப்பவன் ப்ராணனளிப்பவன் ஆகிறான். அன்னமளிப்பது அமிர்தமளிப்பதற்கு சமம். இந்த புண்ணிய பூமியில் அன்னமளிப்பவன் மிக்க செல்வந்தராய் பிறப்பான். வறுமை நீங்கி, பெரும் பணக்காரனாவான். அன்னதானம் செய்பவனுக்கு போகமும், ஆயுளும், அழகும் பெருகும். பலம், புகழ், கீர்த்தி இவை உண்டாகும்.

★ தடைபட்ட திருமணம், புத்திர பாக்யம் இவை உண்டாகும் ★ வறுமை அகல ★ கொடிய நோய்கள் நீங்க ★ தொழில் மந்தம் நீங்கி முன்னேற்றம் காண ★ பிரிந்தவர்கள் ஒன்றுசேர ★ நீண்ட ஆயுள், கடன் தொல்லையிலிருந்து விடுதலை ★ மனநிம்மதி பெற ★ பெற்றோர், மூதாதையர் நினைவு நாளில் ★ ஆக நீங்கள் நினைத்த காரியம் நிறைவேற நாங்கள் உங்கள் சார்பாக அன்னதானமளித்து, பிரஸாதம் அனுப்பி வைக்கிறோம்.

★ சிறியதொகை மற்றும் அரிசி போன்ற உணவு பொருட்களும் ஏற்றுக் கொள்ளப்படும்.
★ ரூ.500 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் ஒரு ஆண்டுக்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.1000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.5000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் பத்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.10,000 அனுப்பும் அன்பர்களுக்கு ஆயுள்காலம் முழுவதும் கோபுர தரிசனம் மாத இதழ் அனுப்பி வைக்கப்படும்.

ரூ.1000 அனுப்பும் அன்பர்களுக்கு கந்தபுராணம் அல்லது பகவத்கீதை புத்தகம் அனுப்பி வைக்கப்படும். ரூ. 5,000 மற்றும் ரூ. 10,000 அளிக்கும் அன்பர்களுக்கு கவி-ந்யாய-மீமாம்ஸ சிரோமணி ஸ்ரீமான் திருவெண்காடு டி.கே. முத்துஸ்வாமி சாஸ்திரிகளால் தயாரிக்கப்பட்டு பூஜையில் வைத்த யந்திரம் அன்பர்களின் விருப்பத்திற்கேற்ப எந்த யந்திரம் தேவையோ அந்த யந்திரம் இலவசமாக வழங்கப்படும். மேலும் பகவத்கீதை புத்தகம் அல்லது கந்தபுராணம் புத்தகம் இலவசமாக அனுப்பி வைக்கப்படும். ரூ. 10,000 அனுப்பும் அன்பர்களுக்கு 10 ஆண்டுகளுக்கு மாதந்தோறும் பிரசாதம் அனுப்பிவைக்கப்படும். ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்திக்கு அணில் செய்த ஸேவை போல் இந்த லோகக்ஷேமத்திற்கு நம்மால் இயன்றளவில் உபகாரம் செய்திடுவோம். நேரில் கலந்து கொள்ள அன்புடன் அழைக்கிறோம்.

நன்கொடை அனுப்பும் அன்பர்கள் GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST, CHENNAI-41 என்ற பெயரில் CHEQUE/D.D./M.O. மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். என்றென்றும் புனித ஸேவையில் மனப்பூர்வமாக செயலாற்றும் எமது பணிக்கு உங்களது மேலான ஒத்துழைப்பை என்றென்றும் நாடுகிறோம்.

CHEQUE/D.D./M.O. அனுப்ப வேண்டிய முகவரி :


## கோபுர தரிசனம் அன்னதான அறக்கட்டளை

## GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST

**M-11/F-4, TNHB FLATS, I MAIN ROAD, THIRUVALLUVAR NAGAR, THIRUVANMIYUR, CHENNAI - 600 041. SOUTH INDIA**

☎: 4900303, 4900603 Fax: (044) 4916316 E-mail: gopuradarisanam@yahoo.com


★ நீங்கள் தேடும் மனநிம்மதி அன்னதானத்தில் கிடைக்கிறது ★ ஸர்வேஜனா: - ஸுகினோபவந்து



# ஆர்.கே.ஸ்ரீராம்குமார்

ஆர்.கே.ஸ்ரீராம்குமார் எம்.எஸ்.ஸுக்கு வயலின் வாசித்தவர்களுள் மூன்றாம் தலைமுறைக் கலைஞர். இவரது தாத்தா ஆர்.கே. வேங்கடராம சாஸ்திரியும், எம்.எஸ்.ஸுக்கு வாசித்ததுண்டு. உலகம் போற்றும் தம்பதியுடன் பயணம் செய்த அனுபவங்களை இங்கே பகிர்ந்து கொள்கிறார் ஸ்ரீராம்குமார்.

"உனக்கு நீது சரண பங்கஜ பாடமா? டெல்லியில் பாடச் சொல்லி ரொம்ப கேட்டிருக்கா..." அம்மா மிகுந்த அக்கறையோடு கேட்பார்.

"அடுத்தது டெல்லி போறோம். அதுக்குள்ளேயானும் தயார் ஆயிடு..." - ஒரு மாசம் முன்பாகவே மாமாவும் உற்சாக உத்தரவு போடுவார்.

அம்மாவுடைய அக்கறை, நான் அந்தக் கல்யாணி ராக கீர்த்தனையைப் பாடம் பண்ண வேண்டும் என்பது. மாமாவுடைய ஆசையோ, இந்த முறையாவது நான் சீட்டாடக் கற்றுக்கொண்டு டெல்லி பயணத்தின்போது பொழுதுபோக அவருக்குக் 'கை கொடுக்க' வேண்டும் என்பது!

நான் இந்த வித்தையைக் கற்றுக் கொள்ளப் போவதில்லை என்பதும் அவருக்குச் சமமாய் உட்கார்ந்து ஆடப் போவதில்லை என்பதும் அவருக்கு நன்றாகவே தெரியும். தெரிந்தும் இந்தக் கேள்வியைக் கேட்பதில் அவருக்கு அலாதி மகிழ்ச்சி. அந்த மகிழ்ச்சியை அவருக்குக் கொடுப்பதில் எனக்கும் மகிழ்ச்சி!

# லக்ஷ்மி

சதாசிவம் - சுப லக்ஷ்மி தம்பதியுடன் பயணம் என்பது இப்படிப்பட்ட சிறிய மகிழ்ச்சிகளை நிறைய உள்ளடக்கிய ஓர் ஆனந்த அனுபவம். சென்னையிலிருந்து காஞ்சிபுரம் வரை காரில் போய் வருவதானாலும் சரி, தலைநகர் டெல்லி வரை இரண்டு இரவுகள் ரயில் பயணமானாலும் சரி; ஒரு குடும்பமே உல்லாசப் பயணம் செய்வது போன்ற உணர்வோடுதான் குழு புறப்படும். எப்போது வெளியூர் சென்றாலும், இசைக் குழுவினர் அனைவரும் ஒன்றாகப் பயணம் செய்து, ஒரே இடத்தில் தங்கி, ஒன்றாகத் திரும்ப வேண்டும் என்பது மாமா விருப்பம். பயண ஏற்பாடுகளை இப்படித்தான் செய்ய வேண்டும் என்று சட்டமே ஏற்படுத்தலாம். அந்த அளவுக்குச் சின்னச் சின்ன விஷயங்களைக் கவனித்து ஏற்பாடுகள் செய்து வைத்திருப்பார் அம்மா - மாமாவின் ஆதர்ச உதவியாளர் ஆத்மநாதன்.

சென்டிரல் ஸ்டேஷனில் கார் நுழையும்போது ஸ்டேஷன் மாஸ்டர் போர்டிகோவில் காத்திருந்து வரவேற்பார். தும்பைப் பூ கதரும் தூய விபூதியுமாக மாமா முன் செல்ல, அரக்கு - பச்சை காஞ்சிபுரம் பட்டும் ஜாதி மல்லிகையின் இனிய மண





சீஸன் சிறப்புப் பக்கம்

# சரஸ்வதியுடன் ரயில் பயணம்!

ழும் தவழ, அம்மா ஓர் அடி பின்னால் நடக்க, என் வயலின் பெட்டியைத் தூக்கிக் கொண்டு நான் பின் தொடர் கையில் உலகமே கொண்டாடும் மனிதர்களுடன் செல்கிறோம் என்கிற உணர்வு



எனக்குள் பரவி பரவசமுண்டாக்கும்.

சுற்றியுள்ள மனிதர்கள் அத்தனை பேரும் தங்களையறியாமல் ஓர் அடி பின் வாங்கி நின்று ஏதோ சுவாமி புறப்பாட்டை தரிசிப்பது போல், இந்த திவ்ய தம்பதியைப் பார்த்து மகிழ்வார்கள். தாழ்ந்த குரலில் ஒருவருக்கொருவர் ஆச்சர்யத்தையும் மகிழ்ச்சியையும் பரிமாறிக் கொள்ளுவார்கள்.

ரயில் பிளாட்ஃபார்முக்கு வருவதற்கு முன்பே போய்ச் சேர்ந்து விடுவதுதான் வழக்கம். பெட்டிப் படுக்கைகளுக்கு மத்தியில் காத்திருப்போம். அரையிருட்டாக இருந்தாலும் அம்மாவின் லக்ஷ்மி, சரஸ்வதி பொறித்த தம்பூராக்கள் வருவோர் போவோரை நிறுத்தி வைத்துவிடும். அடையாளம் புரிந்து கொண்டு ஆட்டோகிராஃப் கேட்க வருவார்கள்.

''அவர்கிட்டே முதல்ல வாங்கிக்கோங்கோ'' என்று மாமா இருக்கும் திசையைக் காட்டுவார் அம்மா. பிறகு ''பாவம்,



“அம்மாவுக்கு மட்டும் பக்க வாத்தியம் வாசிக்கறியே...? எனக்கு வாசிக்கக் கூடாதா!”

ஆசையா கேட்கறா" என்று தாமும் கையெழுத்துப் போட்டுக் கொடுப்பார்!

பெட்டி படுக்கைகள் ரயிலில் ஏறும். இரண்டு தம்பூராக்களும் ஏ.ஸி டு டயர் கம்பார்ட்மெண்டின் மேல் பர்த்தில் பத்திரமாக வைக்கப்படும். அம்மாவும் மாமாவும் எதிரெதிராக அன்றி, அடுத்தடுத்த பிரிவு களில் பயணம் செய்வார்கள்.

அதிகாலையில் அம்மாவுக்குக் காப்பி கொடுத்தாக வேண்டும். அந்த விஸ்தாரமான சடங்கில் அம்மா வின் உதவியாளர் விசாலம் ஈடுபட்டிருக்க, நான் காப்பி குடியாதவனாகவே காலங்கடத்துவது குறித்து அம்மா புலம்பித் தீர்த்துவிடுவார்.

ஏதேனுமொரு ஸ்டேஷனில் காலை உணவுக்கும் பிறகு மதிய உணவுக்கும் சிறப்பு ஏற்பாடு செய்யப் பட்டிருக்கும். சாப்பாட்டுக் கடை முடிந்ததும் மாமா சீட்டாட்டத்தை ஆரம்பிப்பார். பெட்டிகளைச் சேர்த் துப் போட்டு ஒரு 'மேஜை' உருவாக்கி, மகள் ராதா, ம்ருதங்கம் பிரசாத், கஞ்சிரா நாகராஜனைச் சேர்த்துக் கொண்டு ஆட ஆரம்பிக்கும்போது ஞாபகமாக என் னிடம் கேட்பார், "அம்மாவுக்கு மட்டும் பக்க வாத்தியம் வாசிக்கறியே...? எனக்கு வாசிக்கக் கூடாதா!"

நான் சிரித்துவிட்டு "அடுத்த தடவை மாமா" என்று பதில் சொல்ல, ஆட்டம் தொடரும். மாமா மாலைவரை நிமிர்ந்த நிலையில் கால்மேல் கால் போட்டு உட்கார்ந்து ஆடிக் கொண்டிருப் பார்.

பக்கத்துப் பிரிவில் அம்மா, ஆத்மா மாமாவுடன் எனக்குப் பொழுது போகும். அம்மா பகலில் தூங் குவது அபூர்வம். தமது மேடை அனுபவங்களையும், வாழ்க்கை அனுபவங்களையும் விஸ்தாரமாகச் சொல்லுவார். சங்கீதம் தொடங்கி சமூகப் பிரச்னை வரை விவாதிப்பார். அகாரங்களும் வரிசைகளும் பாடச் செய்து, தனது தாயார் தன் குரலைப் பக்குவப் படுத்த உதவியதை நினைவு கூர்வார். தன் தாயார் வீணை வாசிக்க... தான் உடன் பாடியது, வித்வத் சபையில் முதன் முதலில் கச்சேரி செய்தது, சென் னைக்குக் குடி பெயர்ந்தது, முசிறி மாமா, செம் மங்குடி மாமாவிடம் கற்றது, பிருந்தா அம்மா... இன்னும் ஏராளமான கலைஞர்களுடன் பரிமாற் றங்கள், 'மீரா'வில் நடித்தது, உலகம் முழுதும் பயணம் செய்தது, காஞ்சி முனிவரின் ஆசியையும், பாபாவின் கருணையையும் பெற்றது என்று நினைவுகளில் மூழ்கி அவர் சம்பவங்களை விவரிக்க, விவரிக்க, கேட் போருக்குப் புத்துணர்ச்சியும் உத்வேகமும் பிறக் கும்.

அகாடமியில் ஒருமுறை பேகடை ராகத்தில் ராகம் தானம் பல்லவி பாடிய சம்பவம் அடிக்கடி நினைவு கூரப்படும். "அது முசிறி மாமா தயார் பண்ணிக் கொடுத்தார்... திருவாலங்காடு சுந்தரேச அய்யர் வயலின். பாடி முடிச்சதும் அத்தனை பேருக்கும் நடு



## பஞ்சரா? கவலையே இல்லை!

மேலைநாட்டில் கார்களிலிருக்கும் டயர்கள் எல்லாமே டியூப் லெஸ்தான். அதாவது - டயர் மற்றும் அதை இணைத்திருக்கும் இரும்பு சக்கரத்திற்கும் இடையில் காற்று நிரப்பப்பட்டிருக்கும். இந்த டயர் பஞ்ச்சர் ஆனால் வேறு டயர் மாற்ற வேண்டும். ஆனால் ஜெர்மனியின் 'மிஷல்' நிறுவனம் கண்டு பிடித்துள்ள இந்தப் புதிய வகை டயரில், மணிக்கு 200 கி.மீ வேகத்தில் நீங்கள் சென்று கொண்டிருக்கும் போதுகூட, டயர் பஞ்ச்சர் ஆனால், டயருக்குள்ளிருக்கும் இரும்புத் தகடு தானாகச் சுற்றி கார் பயணத்தைத் தொடர வைக்கும்.



- பாரிஸ். பார்த்தசாரதி

---

விலே காரைக்குடி சாம்பசிவ அய்யர் (மிகப் பெரிய வீணை வித்வான்) மேடைக்கு ஏறிவந்து சொன்னார். 'சுபலக்ஷ்மி! நீ வீணையைக் கண்டத்திலேயே (தொண்டை) வைச்சுண்டு இருக்கே...?'ன்னார்..." - இந்தச் சம்பவம் அம்மா நெகிழ்ச்சியுடன் நினைவு கூர்ந்தார் எனில் ஹிந்துஸ்தானி பாடகி சித்தேச்வரி தேவி தொடர்பான சம்பவத்தை மகிழ்ச்சியுடனும் நகைச்சுவையுடனும் விவரிப்பார்.

"சித்தேஸ்வரி தேவி எனக்கும் ராதாக்காவுக்கும் டும்ரி பாட கற்றுக் கொடுத்தார். ஒரு ராகத்து ஸ்வரஸ்தானங்களைத் திரும்பத் திரும்பப் பாடி, பயிற்சி பண்ணச் சொல்லிட்டு, அவர் ஜப மாலையை உருட்ட ஆரம்பிச்சுடுவார். அவர் உருட்டி முடிக்கிற வரைக்கும் நாங்க அகாரம் பாடிண்டிருக்கணும்..."

பாமரர்களும் பண்டிதர்களும் போற்றிய இசை தனக்கு வசமானதைக் குறிப்பிட்டு "அத்தனைக்கும் மாமாதான் காரணம்" என்று உரையாடலை நிறைவு செய்வார் அம்மா.

உயர்ந்த சிந்தனைகளுடன் பரஸ்பர அன்பும் மரியாதையும் நிரம்பிய எளிய வாழ்க்கை வாழ்ந்தனர் இத் தம்பதி. அந்த வாழ்க்கை முறைதான் பயணங்களின் போதும் பிரதிபலித்தது. மாலை ஆனால் எங்கள் பேச்சுக் கச்சேரிக்கு முற்றுப்புள்ளி விழுந்துவிடும். மாமாவின் சீட்டாட்டக் கூடத்துக்குப் போய் உட்கார்ந்துகொண்டு சிறிது நேரம் செலவிடுவார் அம்மா. இரவு உணவு ஒரு சுற்று வலம் வரும்.

அனைவரும் உறங்கும் நேரத்தில் என் பர்த்தில் படுத்தபடி இறைவனுக்கு நீண்ட நேரம் நன்றி சொல்லிக் கொண்டிருப்பேன்- இவ்வளவு உயர்ந்த மனிதர்களுடன் எனக்குத் தொடர்பு ஏற்படுத்திக் கொடுத்ததற்கு.

டெல்லியில் 'நீது சரண' பாடி 'ஓ ஜகஜனனி' என்ற அடியில் நிரவல் செய்து, கல்யாணி ராகத்தின் அத்தனை அழகுகளையும் அமுதென வடித்து, ரசிகர்களை கொள்ளை கொண்டு விட்டுத் திரும்புகையில், இதே ரீதியில் எளிய உரையாடலிடையே பயணம் தொடரும். மீண்டும் நன்றி சொல்வேன் இறைவனுக்கு - இந்த தேவ கானத்திடையே நான் பிறந்து வளரச் செய்ததற்காக. ஏன், பிறக்கும் முன்பே கூட அம்மாவின் பாட்டுதான்... என் தாயாரின் சீமந்தத்துக்கு வந்து பாடிச் சிறப்பித்தாரே எம்.எஸ். அம்மா!



**பா**ர்த்தசாரதி சுவாமி சபாவில் அறுசுவை அரசு நடராஜனின் கைவண்ணத்தில் கேன்டீன் என்றால், நாரத கான சபாவில் ஞானாம்பிகா ஜெயராம ஐயரின் கேன்டீன். மைலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸில் 'மீனாம்பிகா' கண்ணன்.

"அகடமியில் இலை, காய்கறிக் குப்பைகள் என்று ஒரு பிரச்னை இருக்கிறது. அதுவும் தவிர, வெளியாட்கள் நிறையப் பேர் லஞ்ச் டயத்தில் வந்து விடுவதால், சாப்பாட்டுக்குக் காத்திருக்கும் ரசிகர்கள் பாடு திண்டாட்டமாகி விடுகிறது. அதனால் சாப்பாடு வேண்டாம், டிபன் ஐட்டங்கள் மட்டும் போதும் என்றும் சொல்லி வருகிறோம். ஆனால் அது காண்ட்ராக்டர்களுக்குக் கட்டுப்படி ஆவதில்லை. எப்படியும் டிசம்பர் முதல் வாரத்துக்குள் டெண்டர்கள் முடிவாகி விடும். மின்சாரக் கட்டணம் செலுத்தத் தனி மீட்டர், போதுமான இடம் எல்லாமே ரெடியாக இருக்கிறது. கான்டீன் நடத்துபவர் அகடமிக்கு ராயல்டி தர வேண்டும் என்ற ரூல் இருக்கிறது. எனவே இனிமேல்தான் யார் திருப்திகரமான சேவைக்கு ஒப்புக் கொண்டு டெண்டர் எடுக்கிறார்கள் என்பதைத் தீர்மானிக்க வேண்டும்" என்கிறார் எம்.எஸ்.வி.

"மியூஸிக் சீசனில் கேன்டீன் போடுவது வியாபார நோக்கத்தில் செய்கிற காரியமில்லை. அதற்காக நஷ்டப்படுவதாக அர்த்தமில்லை. இது ஒரு கௌரவம். சங்கீத சீசனில் நகரத்தின் நாலு பெரிய மனிதர்கள், கலா ரசிகர்கள் வந்து சாப்பிட்டு, பாராட்டிவிட்டுப் போகிறபோது ஏற்படுகிற சந்தோஷம் இருக்கிறதே, அது அலாதி. தலை வாழை இலையில் அறுசுவை விருந்து படைக்க நாங்க தயார்!" என்கிறார் அறுசுவை அரசு நடராஜன்.

தயாராகிறார்கள்...

# கேன்டீன் கச்சேரி!



## ஸ்பெஷல் உபசரிப்பு!

நாரத கான சபாவில் கேன்டீன் நடத்தப் போகிற ஜெயராம ஐயர் அடுத்த வருடம் சமையல் அனுபவத்தில் அரை செஞ்சுரி காணப்போகிறார். நாரத கான சபாவில் இது இவருக்குப் பதினோராவது வருடம். ''சங்கீத சீசனில், கேன்டீனுக்கு வருகிற ரசிகர்கள், வழக்கமாக ஓட்டலில் சாப்பிட வருகிறவர்கள் போல இல்லை. அவர்களை 'கிளாஸ் ஆடியன்ஸ்' என்றுதான் கொண்டாடுகிறோம். — சந்தோஷமாகச் சொல்கிறார் ஜெயராம ஐயரின் மகன் ரமேஷ்.

''2000மாவது வருடம் பிறந்த போது, வழக்கமான கச்சேரி பத்து மணிக்கு முடிந்தபின், பத்மா சுப்ரமணியம் மற்றும் கிருஷ்ணா குமாரியின் நடனம். புத்தாயிரம் ஆண்டு பிறக்கும் கணம் வரை நடந்தது. அன்றைக்கு, காபி, டீ, டிபன் என எதுகேட்டாலும் இலவசமாகத் தரும்படி சொல்லிவிட்டார் சபா செயலாளர் கிருஷ்ணசாமி. அன்று வந்தவர்களையெல்லாம் இப்படி ஸ்பெஷலாக உபசரித்தது மறக்க முடியாத அனுபவம்'' என்கிறார் ரமேஷ்.

இந்த வருஷத்துக்கான தயாரிப்பு முஸ்தீபு என்ன?

ஆனியன் குணுக்கு, வெஜிடபிள் போண்டா, இளந்தோசை என பத்து விதமான உணவுப் பட்டியல் இவரது கைவசம் உள்ளது. எல்லாமே கஸ்டமர் சாய்ஸ்!

## இரட்டை லாபம்!

“மார்கழி மாதத்தில் கல்யாணம் இருக்காது. எங்கள் தொழிலாளர்களுக்கு வேலை கிடையாது. அந்த சமயத்தில், சங்கீத சபா கேன்டீன் நடத்துவதில், இரட்டை லாபம். ஒன்று, தொழிலாளர்களுக்கு வேலை தர முடியும். நமக்கும் புது கஸ்டமர்கள் கிடைப்பார்கள்” என்கிறார் மீனாம்பிகா கேட்டரிங் கண்ணனின் மகன் பாஸ்கரன். இவர் இரண்டு வருடங்களாக மைலாப்பூர் பைன் ஆர்ட்ஸ் கிளப்பில் கேன்டீன் நடத்துகிறார். மணக்கும் தஞ்சாவூர் டிகிரி காபி இவரது ஸ்பெஷாலிடி! ராகங்களின் பெயரில் வித்தியாசமான ஸ்வீட் ஐட்டங்கள் தயாரித்து வழங்கவிருக்கிறார்களாம்.





• அறுசுவை நடராஜன்



• பாஸ்கரன்

## சுடச்சுட ஜாங்கிரி, நெய் கிச்சடி!

"சங்கீதம் கேட்டு ரசிக்கவே இங்கு ரசிகர்கள் வருகிறார்கள். எனவே இங்கே சங்கீதத்துக்குத்தான் முக்கியத்துவம். சாப்பாட்டுக்கு இல்லை" என்கிறார் ஸ்ரீ கிருஷ்ண கான சபா செயலாளர் யக்ஞராமன். "கச்சேரிக்கு வருகிறவர்கள், இடைவேளையின் போதோ, கச்சேரி கேட்ட பிறகோ ஏதோ லைட்டாகச் சாப்பிட, காபி குடிக்கத்தான் இங்கே கேன்டீன்" என்கிறார் கேன்டீன் நடத்தும் குருமூர்த்தி.



• குருமூர்த்தி

கி.கா.சபா கேன்டீன் ரசிகர்கள் பட்டியலில் சுப்புடு, எஸ்.வி.சேகர் உண்டு. இங்கே ஸ்பெஷல் ஐட்டங்கள் சுடச்சுட ஜாங்கிரி, நெய் கிச்சடி!

— எஸ். சந்திரமௌலி, சித்தார்த்

படங்கள்: ஸ்ரீஹரி



• மந்திர மூர்த்தி

## மலபார் அடை; மிளகு பொங்கல்!

**பா**ரத் கலாச்சார் ஒய்.ஜி.பி. அரங்குக்கு வரும் கலா அபிமானிகளுக்கு, ருசியாக டிபன் வழங்குகிறார் மந்திர மூர்த்தி. சாப்பாட்டைவிட இங்கே டிபன் ஐட்டங்களுக்குத்தான் முக்கியத்துவம். இட்லி, கொத்சு சாப்பிட்டுவிட்டு, 'பிரமாதம்' என்று டி.என். சேஷனும், குன்னக்குடியும் பாராட்டியதை சந்தோஷமாக நினைவு கூர்கிறார் மந்திரமூர்த்தி. மலபார் அடை, மிளகு பொங்கல் என ருசியான மெனுப்பட்டியல் தயாராக வைத்திருக்கிறார்...

வாழை இலை, சுத்தமான குடிநீர், தளிர் வெற்றிலை, தரமான காபித்தூள் என பார்த்து பார்த்து ஆர்டர் கொடுக்க ஆரம்பித்துவிட்டாராம்.

## காதில் விழுந்தவை:

● ஏ.கே. மூர்த்திக்கு அமைச்சர் பொறுப்பை வாங்கிக் கொடுத்ததால், பா.ம.க.வின் மற்றொரு பாராளுமன்ற உறுப்பினர் பு.தா. இளங்கோவன், டாக்டருக்கு எதிராகப் போர்க்கொடி தூக்கினார். அவருக்கு ஆதரவு தெரிவித்தார் வந்தவாசி பாராளுமன்ற உறுப்பினர் துரை. தற்சமயம் இளங்கோவன் டாக்டருடன் சமாதானமாகப் போய்விட, அவரது கோபத்துக்கு ஆளாகிவிட்டார் துரை. இப்போது டாக்டருக்கு கடுப்பேற்றும் விதமாக, திருவண்ணாமலை மாவட்டத்தில் உள்ள பா.ம.க.வின் கணிசமான தொண்டர்களை ஜெகத்ரட்சகனின் வீர வன்னியர் பேரவையில் சேர்த்துவிட்டார் துரை. இந்த நிகழ்ச்சியின்போது ஏற்பாடு செய்யப்பட்டிருந்த பிரியாணி போதாமல் நடந்த கசமுசா தனி விவகாரம். துரையை எப்படிச் சமாளிப்பது என்று இப்போது யோசித்துக் கொண்டிருக்கிறதாம் டாக்டர் வட்டாரம்.

● கலைஞர் மற்றும் மூத்த உடன்பிறப்புகளைப் போலல்லாமல் திமுக இளைஞரணியினர் கணிசமான அளவு கடவுள் பக்தர்கள். சபரிமலை, திருவண்ணாமலை கிரிவலம், மேல்மருவத்தூர் ஆகிய இடங்களுக்கு பக்தி ததும்ப செல்பவர்கள். இந்த நிலையில் கலைஞரின் இந்து மதம் மற்றும் அந்தணர்கள் பற்றிய பேச்சால் சற்று பதற்றமடைந்து போயிருக்கிறார்கள். பெரியார் சொத்தை அனுபவிப்பவர்களே வாயில் பிளாஸ்திரி போட்டுக் கொண்டு 'வோட்டு' எதிர்பார்த்து அரசியல் நடத்தும்போது, நாம் ஏன் ஒரு பகுதியினரைப் பகைத்துக் கொள்ள வேண்டும் என்று ஆதங்கத்துடன் கேட்டார் இளைஞரணிப் பிரமுகர் ஒருவர். ஆமென்!

● "சாத்தான்குளம் இடைத்தேர்தலில் போட்டியிடுவோம்" என்று அம்மா அறிவித்தவுடன், காங்கிரஸ்காரர்களுக்கு நடுக்கம் கண்டுவிட்டது. அதுவும் மறைந்த சட்டமன்ற உறுப்பினர் மணி நாடாரின் மனைவியே அ.தி.மு.க.வில் சேர்ந்து, அதன் சார்பாக அவரே நிற்பார்" என்னும் செய்திகள் அடிபடுகின்றன. இதற்குக் காரணம் அம்மாவுக்கு மணி நாடாரின் மனைவி நன்றிக்கடன் செலுத்த விரும்புவதுதானாம். மணி நாடார் காலமாவதற்குச் சில மாதங்கள் முன் (அதாவது காங்கிரஸ், த.மா.கா சேர்ந்த பிறகு) அவரது மருத்துவச் செலவு முழுவதையும், 'அம்மாவே' பார்த்துக் கொண்டாராம். இந்த நிலையில் காங்கிரஸ் தனித்தே நிற்கும்' என்று இளங்கோவன் அவசரப்பட்டு சொன்னதையும், அந்தக் கட்சியின் சில பிரமுகர்கள் விமர்சிக்கிறார்கள். "சென்னை மேயர் தேர்தலில் அ.தி.மு.க.வை எதிர்த்துப் பொதுவேட்பாளர் போட முயல்கிற இந்த சமயத்தில் இளங்கோவன் ரொம்ப அவசரப்படுகிறார்'' என்றார் ஒரு பிரமுகர்.




● பன்னீர் செல்வத்தின் அமைச்சரவையில் இருந்த வைத்தியலிங்கம், அம்மா மீண்டும் வந்தபோது கழற்றி விடப்பட்டார். இப்போது திரும்ப சேர்க்கப்பட்டிருக்கிறார். இதில் என்ன சிறப்பு என்கிறீர்களா? விலக்கப்பட்டபோது, காலி செய்த அதே பங்களாவில் மீண்டும் அமைச்சராகக் குடியேறியிருக்கிறார் என்பதுதான் சிறப்புச் செய்தி.

- சஞ்சயன்

படம்: ராஜன்

**கா**லையில் ஐந்து மணிக்கு ரேவதி எழுந்தாள். ராதாகிருஷ்ணனை, குழந்தைகளை எழுப்பினாள். ஆறே முக்காலுக்கு அவர்கள் எல்லோரும் வீட்டைப் பூட்டிக் கொண்டு கீழே இறங்கினார்கள். வெளிக் கதவு திறந்து படியிறங்க, எதிரே சங்கரய்யர் நடந்து வந்து கொண்டிருந்தார்.

"என்னது என்னத்துக்கு நீங்க இங்கே வரேள்?"

"ஆமாம்... ஆமாம்... என் வீட்ல தோதுபடலை. புலம்பலா இரண்டு மூணு பேர்



உட்கார்ந்துனுட்டா. கண்ணை மூடிண்டு அப்படியே இருன்னு சொல்லிட்டு, உங்களைத் தேடிண்டு வந்துட்டேன்."

"ரொம்ப சந்தோஷம். ஆனா, உங்க இடத்துல மந்திர ஜபம் கத்துக்கறா மாதிரி ஆகுமா?" என்று ரேவதி சொல்ல, "இடம் முக்கியமேயில்லை. மனசு என்ன பக்குவத்துல இருக்குங்கறதுதான் முக்கியம்."

ராதாகிருஷ்ணன் அவரை வரவேற்று உள்ளே உட்கார வைத்து, மனைவியோடும் குழந்தைகளோடும் நமஸ்கரிக்க, அவர் வீடு சுற்றிப் பார்த்தார்.

"பிரமாதமான இடம்தான். ஆனால், சுவரெல்லாம் பழுதாயிடுத்து. இன்னும் அஞ்சு வருஷத்துக்கு மேல இது தாங்காது" என்று சுற்றிப்பார்த்துவிட்டுச் சொன்னார்.

பூஜையறைக்கு வந்து கைகூப்பினார்.

28

"மனசை ஒருமுகப்படுத்த மந்திர ஜபம் ஒரு வழி. மந்திர ஜபம் ஒருமித்துச் சொல்ல நாடி சுத்தி இன்னொரு வழி. நாடி சுத்தியை சரியாகச் செய்ய குறைவாகச் சாப்பிடுதல் முக்கியம். எனவே, காலை வேளை என்பது உத்தமம். 'நாடி சுத்தி செய்வதற்கு முன்பு நெற்றியில் குட்டிக் கொண்டால் தலைக்குள் இருக்கிற அமிர்த நாடி மெல்லச் சுருங்கி உடம்பு முழுவதும் பரவ, உடம்பு சுறுசுறுப் படையும். எட்டு சொடக்கு இடது நாசி வழி யாக காற்றை இழுத்து, பதினாறு சொடக்கு வலது நாசி வழியாக வெளியே விட வேண் டும். மறுபடியும் எட்டு சொடக்கு வலது நாசி வழியாக இழுத்து பதினாறு சொடக்கு இடது நாசி வழியாக வெளியே விட வேண்டும். அப்பொழுதுதான் உடம்பு ஒரு அமைதியாக உட்காரும். இடுப்புக்குக் கீழே ஒரு கனம் ஏற்பட்டு அசையாத தன்மை வரும் வாய்ப்பு இருக் கிறது. புத்தி அதிகம் அலையாமல் மூச்சை கவனிக்கத் துவங்கும், மூச்சை புத்தி கவனிக்கத் துவங்கு கிறபொழுது மந்திரஜபம் செய்யத் துவங்கலாம். நான் இந்த மந்திர ஜபத்தை காகிதத்தில் எழுதிக் கொடுத்து விடுவேன். பிறகு மனனம் செய்யுங்கள்."

இப்போது தனித்தனியாக மூன்று முறை மகாகணபதியும், பாலாதிரிபுர சுந்தரி மந்திரமும் உங்கள் காதுகளில் சொல்வேன். அப்போது மந்திரம் உங்களுக்குச் சொல்லிக் கொடுக்கப்பட்டுவிட்டதாக அர்த்தம். எல்லா நாளும் விடாமல் செய்ய வேண்டும்.

ஒவ்வொருவராக அருகே உட்கார வைத்து, காது மடலுக்கருகே வாய் குவித்து, அடிக் குரலில் இரண்டு மந்திரங்களும் சொல்லி, தலையைத்தடவி ஆசீர்வதித்தார். திரும்ப மந்திரம் சொல்லச் சொல்லி உச்சரிப்பைத் திருத்தினார்.

'எதுக்கு மந்திர ஜபம். ஏன் இதைச் செய்ய வேண்டும். என்ன பலன் இதனால்?' அவரே கேள்வியெழுப்பினார். அவரே பதிலும் சொன்னார்.

"நம்முடைய புத்தியில், மனத்தில் பலமில்லாததாலேயே பிரச்னைகள் பலதும் தோன்றுகின்றன. பிரச்னைகளைத் தீர்க்க முடியாததால் கோபம் வருகிறது. கோபம் மேலும் பிரச்னைகளைக் கொண்டு வந்து கொடுக்கிறது. நம்மைச் சுற்றியுள்ள அத்தனை ஜீவன்களையும் நாம் எதிரிகளாக, நமக்கு வேண்டப்படாதவர்களாக, வெறுக்கத்தக்கவராக பார்த்துவிடுகிறோம். இது வாழ்க்கையை மிக மோசமானதாக மாற்றி விடுகிறது. எங்கு போயினும், எவரோடு இருப்பினும், நம்மால் நல்ல உறவு வைத்துக் கொள்ள முடியவில்லை என்பது மிக துக்ககரமான விஷயம்.

நான்கு நாட்கள் நண்பனாக இருந்தவர், ஐந்தாம் நாள் பகைவர் ஆவார் என்றால், அது அவர் மீது மட்டும் உள்ள குற்றமல்ல. உங்கள் மீது என்ன குற்றம் இருக்கிறதென்றும் நீங்கள் உற்றுப்பார்க்க வேண்டும். கோபப் படுதலை, பொறாமைப்படுதலை, ஆசையை, அகங்காரத்தை இந்த மந்திர ஜபம் மெல்ல மெல்லக் குறைக்கிறது. ஆனால், இந்த மந்திர ஜபம் செய்வது ஒரு நடிப்பாக, ஒரு நாடக மாகப் போய்விடக் கூடாது. 'நான் மந்திர ஜபம் செய்கிறேன் பார்' என்று அலட்டிக் கொண்டால், ஒரு நாடகத்தன்மை வருவதற்கு வாய்ப்புண்டு. எனவே மற்றவர்களிடம் இதுபற்றிப் பேசாது.

பாலகுமாரன்



திரும்பத் திரும்ப மந்திரம் சொல்லும் பொழுது, ஒரு நாற்பது ஐம்பது நாளில் உங்கள் மனோபலம் பெருகியிருப்பதை நீங்கள் நிச்சயம் உணர்வீர்கள்.''

அவர் கைப்பட எழுதிக் கொடுத்ததை ஜெராக்ஸ் செய்து, அதைத் தனியாக வைத்திருந்தார். அவர்களுக்குள் பிரித்து வழங்கினார்.

அவர்கள் மறுபடியும் விழுந்து வணங்க, மெல்ல குழந்தைகளைத் தடவி விட்டார்.

ராதாகிருஷ்ணனை அருகே வந்து அணைத்துக் கொண்டார்.

"எல்லாம் சரியாப் போயிடுத்து. அவன் இன்னிக்குச் சாயந்திரம் எங்கிட்ட வருவான். நீங்களும் வாங்கோ. எவ்ளோ கொடுக்கப் போறேன்னு கேட்கப்போறேன். உங்களை வைச்சுண்டு பேசப்போறேன். எத்தனை முடியுமோ அத்தனை வாங்கித்தரேன். நீங்க எவ்வளவு சீக்கிரம் காலி பண்ணணுமோ, அவ்வளவு சீக்கிரம் பண்ணிடுங்கோ'' என்று மெல்ல இனிமையாகப் பேசினார்.

ராதாகிருஷ்ணனுக்குச் சட்டென்று, இவருக்கு இதில் என்ன லாபம். கமிஷன் ஏதேனும் கொடுப்பானா என்ற கேள்வி எழுந்தது.

கேள்வி எழுந்த சமயத்தில் சங்கரய்யருக்கு ராதாகிருஷ்ணனின் மனோ நிலை புரிந்து போயிற்று. வீட்டை வாங்குகின்ற வட இந்தியர் போன் செய்தார். சங்கரய்யர் வீட்டில் பேச அழைத்தார். ராதாகிருஷ்ணன் சரியென்று ஏற்றுக் கொண்டார்.

"நான் அதுக்கு பகடின்னு பேர் சொல்ல மாட்டேன். வீட்டைக் காலி பண்ணிண்டு போறதுக்கு நன்கொடையா, சன்மானமா? எண்பது லட்ச ரூபா. கோர்ட்டுக்குப் போனா பதினைஞ்சு வருஷமாகும். காலி பண்றேன்னு முன் வந்தது ரொம்பப் பெரிய விஷயம். இரண்டே முக்கால் கோடி ரூபாய்க்கு ஆறு மாடிக் கட்டடம் கட்டப்போறன்னு சொல்றார். உனக்கு இவரு கொடுக்கற எண்பது லட்சம் பெரிய விஷயமில்லை. கட்டப்போறது கமர்ஷியல் காம்ப்ளெக்ஸ்.

"அற்புதமான இடம். கெஸ்ட் ஹவுஸ், திறந்த ரெஸ்டாரண்ட் கட்டலாம். எல்லா மார்க்கெட்லேர்ந்தும் நடக்கற தூரம். பாரீஸ் நெரிசல்தான். ஜனக் கூட்டம் அதிகம்தான். ஆனா, வியாபாரிகளுக்கு சொர்க்கம். வடக்கேயிருந்து என்ன எடுத்துண்டு வந்தாலும் மெட்ராஸ்ல விக்கும்யா. இது வடக்க இருக்கற அத்தனை பேருக்கும் தெரியும். ரயில்லேயும், விமானத்துலயும் வந்து இறங்கறவன் இரண்டு பெட்டி எடுத்துண்டு வருவான். ஒண்ணு அவன் துணிமணிப் பெட்டி. இன்னொண்ணு சரக்குப்பெட்டி.

"ஜார்ஜ் டவுனை யாரும் அழிக்க முடியாது. இது காளிகாம்பாள் உட்கார்ந்திருக்கற இடம். எங்க சக்தி பீடம் இருக்கோ, அங்க செல்வம் இருக்கும். பரபரப்பு இருக்கும். ஓடு ஓடுன்னு ஓடற ஓட்டம் இருக்கும். இது சம்பளக்கார இடமில்லை. வியாபாரி இடம். காளிகாம்பாள் எங்கேயிருந்து வந்தாளோ அந்த இடத்துல ரஜோ குணம், நகர்ந்து போய், தமஸ் வந்துருத்து. கோட்டையில சம்பளக்காரன் வந்து உட்கார்ந்துட்டான். நிதானமாத்தான் செயல்படுவான்.

"நீங்க வடநாட்டு வியாபாரி. வைஷ்ணவ சம்பிரதாயம். பெரிய வைஷ்ணவக் கோயில் எங்க இருந்தாலும் அதைச்சுத்தி உள்ளயோ, வெளியவோ ஒரு வனதுர்கை இருக்கும். ஸ்ரீரங்கம் கோவில்ல இருக்கு. ஆனா காண்பிக்கமாட்டா.''

சங்கரய்யர் சம்மணமிட்டுக் கொண்டு மிகக் கம்பீரமாய் அந்த வட இந்திய பணியாவிடம் அவனை உற்சாகப்படுத்திப் பேசிக் கொண்டிருந்தார்.

அவன் கைகளைக் கட்டியவாறு மெல்லிய குரலில் பேசினான்.

"எனக்கும் நீங்கள் சொல்கின்ற அதே எண்ணம்தான் இருக்கிறது. கெஸ்ட் ஹவுஸ், மாடி ரெஸ்டாரண்ட் எல்லாமுமே நான் மனத்துக்குள் நினைத்துக் கொண்டிருந்தது. எப்படி நீங்கள் சொல்கிறீர்கள் என்று

---

''வீட்டிலிருந்த நகைகளைத் திருடியவன் முதல்ல என் மனைவியின் 'ரிப்பனை'க் கட் செய்து விட்டான்...''

''எதுக்கு ரிப்பனை வெட்டினான்...?''

''அவன் செய்யும் முதல் திருட்டாம்...''

— நாமக்கல் பாலு

ஆச்சரியமாக இருக்கிறது. இதை நான் இன்னும் என் மனைவியிடம் கூடப் பகிர்ந்து கொள்ளவில்லை. இந்த வேலை முடியட்டும், இந்தக் கட்டடம் முழுமையாகட்டும், பிறகு சொல்லலாம் என்று நினைத்தேன். என் மனத்தில் உள்ளதை நீங்கள் சொல்வது சந்தோஷமாக இருக்கிறது" என்று மெய்சிலிர்த்தான்.

"ராதாகிருஷ்ணனுக்கு நான் எவ்வளவு தரவேண்டும்? எண்பது லட்சம்தானே. நான் கொண்டு வந்திருக்கிறேன். உங்கள் எதிரிலேயே கொடுத்து விடுகிறேன்."

தனக்குப் பின் இருந்தவனிடம் ஏதோ சொல்ல, அவன் இறங்கி வெளியே போனான். ஒரு பெட்டி வந்தது.

'ஐந்நூறு ரூபாய்க் கட்டாக வைத்திருக்கிறேன்' என்று பெட்டியைத் திறந்து காண்பித்தான்.

சங்கரய்யர் எதிரே அந்தப் பெட்டியைத் திறந்து நோட்டுகளை வேகமாக பெட்டிக்குள் அடுக்கி, ஒன்பது லட்சம் என்று காட்டினார். பிறகு அதை மூடி நிமிர்த்தி சங்கரய்யருக்கு அருகே நகர்த்தி வைத்தான்.

சங்கரய்யர் அதைத் தொட்டுக் கண்ணில் ஒற்றிக் கொண்டார்.

சக்கரம் பதித்த அந்த சூட்கேஸை ராதாகிருஷ்ணனை நோக்கி நகர்த்தினார்.

"வீட்டுக்குப் போய் இதைப் பத்திரப்படுத்துங்கள்" என்று சொல்லி கூடவே ருக்மணியையும், இன்னொரு ஆளையும் துணைக்கு அனுப்பினார்.

அவர்கள் ராதாகிருஷ்ணனோடு வீட்டு வாசல்வரை வந்து விடைபெற்றார்கள்.

**வீ**டு சூழ்ந்து கொண்டு பெட்டியைத் திறந்து பார்த்து சந்தோஷப்பட்டது.

ராதாகிருஷ்ணன் ஒரு லட்ச ரூபாயை எடுத்து பீரோவில் வைத்தார். பிறகு பெட்டியை எடுத்துக் கொண்டு இரண்டு மூன்று வங்கிகளில் ஏறி இறங்கினார். கணக்கு திறந் தார்.

அந்த வீட்டுக்குச் சொந்தக் கார இளைஞன் கம் பெனியை மூடப் போவதாக அறிவித்து, நஷ்ட ஈடாக, அவருக்கு ஒண்ணே முக்கால் லட்ச ரூபாய் தருவதாக எழுதி, காசோலை கொடுத்தான். எந்த ரகளையும் செய்யாமல் விற்பதற்கு உதவி செய்ததற்காக, ஒண்ணேகால் லட்ச ரூபாய் கொடுத்தான்.



மூன்றே நாட்களில் பன்னிரண்டு லட்ச ரூபாய்க்கு ராதாகிருஷ்ணன் அதிபதியானார்.

முகத்தில் ஒளி பிறந்தது. நடையில் வேகம் இருந்தது. ரேவதியின் மீதும், குழந்தைகள் மீதும் பாசமும் பரிவும் பொங்கின.

"தயவு செய்து இந்த வீட்டில் நீங்கள் குடியிருங்கள். இதைப் பூட்டிவிட்டுப் போக எனக்கு மனம் ஒப்பவில்லை. இப்போதைக்கு நான் இதை இடிப்பதோ, மாற்றிக் கட்டுவதோ செய்யப் போவதில்லை. மாநகராட்சியிடம் ஆறு மாடிக் கட்டடத்திற்கு அனுமதி கேட்டிருக்கிறேன். அது கிடைப்பதில் பல சிக்கல்கள் இருக்கின்றன. இது உடனடியாக முடியும் காரியம் அல்ல. வரைபடம் வரைந்து காட்டி, இரண்டு மாடியையும் விற்ற பிறகே, நான் வேலையைத் துவங்குவேன். வெகு நிச்சயமாய் இது ஒரு வருடத்திற்கு மேல் ஆகும்.

"ஆனால், கீழே அவர்கள் தொடர்ந்து குடியிருக்கக் கூடாது. வியாபாரிகளைக் காலி செய்வது மிகக் கடினம். இதோ அதோ என்று போக்குக் காட்டுவார்கள். அவர்கள் பின்னால் நான் அலைய முடியாது. நீங்கள் தொடர்ந்து இருக்கலாம். இருக்க வேண்டும்."

அந்த வட இந்திய பணியா ராதாகிருஷ்ணனைக் கைகூப்பி கேட்டுக் கொண்டான்.

(தொடரும்)

---

*"என் கணவர் சரியான கல்நெஞ்சக்காரரடி!"*

*"எப்படிச் சொல்ற?"*

*"டீ.வி. சீரியல் பார்த்துட்டு அழும் போது ஆறுதல் கூட சொல்ல மாட்டார்!"*

*— எஸ். தமிழ்மணி*

# பகவதி

A

என்று வசனம் பேசும் பகவதி விஜய், காவல் நிலைய வாசலிலேயே. துப்பாக்கியைச் சுழற்றி சுழற்றி எதிரியைச் சுட்டுத் தள்ளுகிறார். மூன்றரை அடி நீளமுள்ள வீச்சரிவாளை விஜய் சுழற்றி விட்டால், விமான ப்ரொபல்லர் மாதிரி விர் விர்.... என்று சுற்றிக் கொண்டேயிருக்கிறது. இதுமாதிரி ரசிகன் தலையில் மிளகாய் அரைக்கும் அபத்தங்கள் ஏராளம்.



'புலியைப் பார்த்து பூனை சூடு போட்டுக் கொண்டது போல..' என்ற பழமொழியை இங்கே பயன்படுத்துவதைத் தவிர வேறு வழியில்லை. பாவம்! நடிகர் விஜய்க்கு என்ன நேர்ந்ததோ தெரியவில்லை. 'தினாவில் ரஜினியை அஜித் காப்பியடித்ததுபோல 'பகவதி'யில் விஜய் தடுக்கி விழுந்திருக்கிறார். 'பாட்ஷா' ரஜினியின் சாயல் கொண்ட பாத்திரம், உடல் மொழி, பஞ்ச் வசனங்கள் என்று ஈ அடிக்காத காப்பியாக வெறுப்பேற்றுகிறார்.

கழுத்தில் காசித் துண்டும், கையில் தேநீர்க் குவளையுமாக வாழ்ந்த ஒரு சாதாரண டீ ஸ்டால் முதலாளி எப்படி 'பகவதி' என்ற பக்கா தாதாவாக மாறினான் என்பது தான் கதை. ரொம்ப ரொம்ப (?) புதிய கதையாகத் தெரியும். இதற்கு எக்ஸ்பயரிடேட் முடிந்த பபிள்கம் கணக்காய் ஒரு சொதப்பல் திரைக்கதை. அதிலும் இரண்டாவது பாதியில் திரைக் கதையின் வினோத போக்கு பற்றி ஒரு கட்டுரையே எழுதலாம்.

சட்டம் சட்டப்படிதான் நடக்கணும்

நிற்க. டீக்கடைத் தொழிலாளியாக வரும் விஜய்யை மட்டும் ரசிக்கலாம்.

வெடிகுண்டுகளை சர்வ சாதாரணமாகக் கையாளும் ஆசிஷ் வித்யார்த்தியை எம்.பி. என்கிறார்கள். ஆசிஷ் வித்யார்த்தியின் சம்பந்திய வில்லன் பாத்திரங்களை எந்த ஃபார்முலா படத்தில் இடம் மாற்றிப் போட்டாலும் பெரிய வித்தியாசம் தெரியாது. அந்த அளவுக்கு, தமிழ் சினிமாவின் தற்போதைய 'ஒன் அண்ட் ஒன்லி' ஸ்டீரியோ வில்லன் இவர்தான்.

லோக்கல் மசாலா பாடல்களைத்தான் நம்பியிருக்கிறார் விஜய். இந்தப் படத்திலும் அதுமாதிரி பாடல்களையே நம்பியிருக்கிறார்.

ரசிகர்களின் புத்திசாலித்தனத்தில் எப்போதுதான் நம்பிக்கை வைப்பார்களோ!

**- விஷுவல்தாசன்**

● ஜஸ்ட் பாஸ்

# மீனின் சிறகுகள்

• க.சீ.சிவகுமார்




மகாநதியிலிருந்து ஒரு வடிகால், தஞ்சை பிரகாஷின் 'கரமுண்டார் வூடு' போலவே. இக்கதையும் பூமிக் கோளத்தில் ஒட்டாத நிலப்பரப்பில் நடைபெறுகிறது. வரைபடத்துக்குள் அகப்பட்டுவிடாத அவரது தீவில் 'உலகில் நடப்பவை போன்றே' சில சம்பவங்களும் நடந்து விடுவதால், அவரது கதைகளை நம்பவும் வேண்டி வந்து விடுகிறது. மீனின் சிறகுகள் (மீறின சிறகுகள் என்பதே சரி) நடைபெறும் இடம் 'பெருமாள் ஸ்டோர்'.

முக்கோண வடிவில் அமைந்த பெருமாள் ஸ்டோர் என்ற அந்த அஞ்சுபத்து வீடுகளின் வெளிச்சங்களும் வீதியில் பாட்டமிட்டிருந்தும் பெருமாள் கோவிலும் சூழலும் இருண்டிருக்கின்றன (பக் : 22). அந்த இடமே முக்கோண வடிவாயும் சூழல் இருண்டுமிருக்கும்போது கதாநாயகன் ரங்கமணியைக் குறைகூற முடியாதுதான். ரங்கமணிக்கு புராண நாயகன் அந்தஸ்து. அவனது மார்பின் திண்மை ஆஞ்சநேயரது போல, லீலா விநோதம் ஸ்ரீ கிருஷ்ணரது போல. ரங்குவின் மேனியழகை சிலாகிக்கையில் நவீன இலக்கியப் பிரகாஷ், 'புஜம்' என்றெல்லாம் வர்ணிக்கிறார்.

கதையில் வரும் பெண்களின் எண்ணிக்கை ஸ்டோரில் ஐம்பது வீடுகளாவது இருக்கும் என்ற எண்ணத்தைத் தோற்றுவிக்கிறது (அஞ்சு பத்து வீடுகள் என்பது சரிதான் போலும்).

ரங்குவின் தந்தை மஹாதேவய்யர் வீடு நுழையுமவனைக் கூப்பிட்டு "ஏண்டா இப்படி ஓடிண்டிருக்கே?" என்று கேட்டுச் செல்லமாகக் கண்டிக்கவே, 178 பக்கம் தாண்ட வேண்டியுள்ளது. தங்கள் வாழ்க்கை பற்றி, சுந்தரியும் பவானியும் இன்னும் சிலரும் ரங்கமணியிடம் பாவமன்னிப்பு கோரும் அளவுக்குப் புலம்புவது, வியப்புத் தருவது.

பல பெண்களிடையே பவானியை மட்டும் அவன் விட்டுவிடுவதும் வியப்புத் தருவதுதான். இந்தக் கட்டத்தில் ரங்கமணி நேசத்தின் பால்பட்டுத்தான் எல்லாக் காரியமும் செய்கிறான் என்பதை வலுவாகச் சித்திரிக்கிறார்.

முயக்க வேகத்தில் ஒரு முகம் வேறுமுகமாய்த் திரிந்து காணும் மனத்தில் பெருகும் காமத்தை (பக்கம் 133) முதன் முதலாய்க் கலாபூர்வமாய் வெளிப்படுத்திய நாவல் இது. இதற்காகவும், படைப்பின் உன்மத்தத்தில் பொறிசிதறும் சொல்லாட்சியில், இலக்கணப் பிழைகளோடும் கூடி மனசிலாக்கிவிடுகிற மொழியாட்சிக்காகவும், இதைப் பாராட்டிவிட இயலாது. வாழ்வெனும் மகாநதியின் ஒரு பகுதியை பாசனத்துக்கெனத் திறவாமல் ஜலக்ரீடைக்கெனத் திறந்திருக்கிறார் பிரகாஷ்.

**மீனின் சிறகுகள், காவ்யா, 514, முதல் குறுக்குத் தெரு, டிரஸ்ட்புரம், கோடம்பாக்கம், சென்னை - 24. விலை ரூ.140.**

அரசு மருத்துவமனை என்பதற்கு அடையாளமாக, ஒரே ஒரு கட்டடத்துடன் பல ஆண்டுகளாக இயங்கி வந்த அந்த மருத்துவமனை, 1985ஆம் ஆண்டுக்குப் பிறகு பதினைந்து லட்ச ரூபாய் மதிப்புள்ள கட்டடமாகிவிட்டது. சுற்றிலும் மரங்கள், நோயாளிகள் இயற்கைச் சூழலோடு அமர திண்ணைகள், என திருமயம் அரசு மருத்துவமனை அழகாக இருக்கிறது.

"இந்த வளர்ச்சியில் அரசின் பங்கு துளி கூட இல்லை. அத்தனையும் பொது மக்கள் அளித்த நன்கொடைகள் தான்" என்கிறார் புதுக்கோட்டை மாவட்டம் திருமயம் அரசு மருத்துவமனை தலைமை டாக்டர் பி.ராமன். யார் யார், எந்தெந்தப் பணிக்கு நன்கொடை அளித்துள்ளார்கள் என்ற விவரம், இரண்டு பெரிய போர்டுகளில் எழுதி மருத்துவமனையின் முகப்பில் பார்வைக்கும் வைக்கப்பட்டுள்ளது.



* திருமயம் அரசு மருத்துவமனை



* பசுமைச் சூழலில்...

"எத்தனையோ லட்சங்களை மருத்துவப் பணிகளுக்காக

# "பட்டா கிடைக்குமா?"

பரிதவிக்கிறார் டாக்டர்!



* சுத்தம் சுகாதாரம்

அரசு செலவு செய்கிறது. அதனால் பலனடைகின்ற மக்கள் அரசாங்கத்திற்கு ஏதாவது செய்ய வேண்டும். மக்களின் பங்கு வேண்டும் என்று நினைத்துச் செயல்படுத்த ஆரம்பித்தேன். மக்கள் மத்தியில் நல்ல வரவேற்பு கிடைக்க, இன்று இந்த மருத்துவமனையில் இல்லாத வசதிகளே இல்லை என்கிற அளவுக்கு வளர்ந்துள்ளது. நாமும் அரசுக்குச் செய்ய வேண்டும் என்ற எண்ணத்தை வளர்க்கத்தான் இந்தத் திட்டம்..." என்கிறார் டாக்டர் ராமன்.

கடந்த பதினேழு ஆண்டுகளில் பொது மக்களின் பங்களிப்பில் மருத்துவமனையில் ஐம்பது மின் விசிறிகள், நிறைய மின் விளக்குகள் அமைந்துள்ள போதிலும், இது வரை பழுதடைந்த பல்புகள் மற்றும் மின் சாதனங்கள் வாங்குவதற்காக 1965ஆம் ஆண்டுக்கு பிறகு ஒரு முறை கூட அரசிடம் விண்ணப்பித்ததே கிடையாதாம். தம்முடைய பங்களிப்பாக அவ்வப்போது தம்முடைய பெற்றோர், குழந்தைகள் பெயரில் மருத்துவமனையில் வளர்ச்சிப் பணிகள் செய்துள்ளார் டாக்டர் ராமன்.

அண்மையில் ஆளுங்கட்சி அரசியல் புள்ளி ஒருவர் மருத்துவமனைக்குள் கடைகள் கட்ட முயற்சிக்க, தனி ஒரு ஆளாக நின்று போராடி மருத்துவமனை இடத்தைக் கைப்பற்ற விடாமல் தடுத்துள்ளார். மருத்துவமனையின் எதிர்கால நலனைக் கருத்தில் கொண்டு, மருத்துவமனை அருகில் உள்ள புறம்போக்கு நிலத்தையும் சேர்த்து, சொந்தச் செலவில் முள்வேலியை அமைத்துள்ளார். இந்த இடத்திற்கு மருத்துவமனையின் பெயரில் பட்டா வாங்க முயற்சிக்கும் டாக்டரை இழுத்தடித்துக் கொண்டிருக்கிறது வட்டாட்சியர் அலுவலகம்.

இவருக்கு வந்த பணி மாறுதல்கள் பொதுமக்களாலும், அரசியல்வாதிகளாலும் பலமுறை தடுத்து நிறுத்தப்பட்டுள்ளன.

கடந்த இரண்டு ஆண்டுகளாக, புதுக்கோட்டை மாவட்ட ஆட்சியரிடம் சிறந்த மருத்துவமனைக்கான மாவட்ட விருதுகள் பெற்றுள்ள 'தலித்' சமுதாயத்தைச் சேர்ந்த இந்த டாக்டருக்கு, இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் வழங்க வேண்டிய துணை இயக்குநர் பதவி உயர்வு வழங்கப்படாமல் இவருடைய ஜூனியருக்கு வழங்கப்பட்டதில் பொதுமக்களுக்கு நிறையவே வருத்தம்.

தற்போது இணை இயக்குநருக்கான பதவி உயர்வை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் டாக்டர் ராமன், இணை இயக்குநராகப் பதவி உயர்வு பெற்றால், புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள அனைத்து மருத்துவமனைகளும், திருமயம் மருத்துவமனையைப் போன்று பொது மக்களால் பராமரிக்க ஏற்பாடு செய்துவிடுவதாகத் தெரிவிக்கிறார்.

தமிழக அரசு இந்த மருத்துவ அதிகாரியைப் பயன்படுத்திக் கொள்ளுமா?

சந்திப்பு, படங்கள் :
**கி. சிங்காரவடிவேல்**



* டாக்டர் ராமன்

இந்தியாவை விட்டு இடம் பெயர்ந்த இந்தியர்கள் இழந்த மண் வாசனையைத் திரும்பப் பெறவும், கலாசாரத் தொப்புள் கொடி அறுந்து போகாமல் இருக்கவும், வசிக்கும் இடத்திலேயே இந்தியக் கோவில்களை நிறுவி, சாஸ்திரிகளை வரவழைத்து அதன் தொடர் முயற்சியாகக் கதாகாலட்சேபம், பரதம், இசைக் கச்சேரி என்று இந்தியாவைக் கொஞ்சம் பிழிந்து தாகத்தைத் தீர்த்துக் கொள்வார்கள்.

ஆக... இந்தியாவுக்கு வெளியே இந்தியக் கோயில்கள் இருப்பது ஒன்றும் ஆச்சரியமான செய்தி அல்ல. மாறாக, வெளிநாடுகளில் இப்படி நிறுவிய இந்தியக் கோவில்களில் இந்தியர்களை விட வேறொரு மதத்தைச் சார்ந்த வெளிநாட்டவர்கள் பெருமளவு வந்து தொழுது, நம் ஸ்லோகங்களைச் சொல்லி, தேர் வடம் இழுத்து, ஊர்வலம் போனால் அது ஆச்சரியம் இல்லையா? அந்த ஆச்சரியம் தாய்லாந்தில் நடக்கிறது. புத்த

• "அம்மா... தாயே... மாரியம்மா"



• சூறைத் தேங்காய்



மதத்தைச் சார்ந்த தாய்லாந்தவர்களும், சீனர்களும் மாரியம்மனைத் தொழும் அழகைப் பார்த்தால் பரவசமாயிருக்கிறது.

மாரியம்மன் கோயில் ஒன்று தாய்லாந்தின் தலைநகரான பாங்காக்கில் இருக்கிறது. 'வட் கேக்' என்ற பெயரில் பாங்காக்கின் 'சிலோம்' என்னும் பிரதான வியாபார ஸ்தலத்தில் அமைந்திருக்கும் இந்த மாரியம்மன் கோயில், பாங்காக்கில் இந்தியத் தாக்கத்தைப் பிரதிபலிக்கும் பிரபல சின்னம்.

தமிழர்கள் இங்கே மிகக்குறைவு. சொற்பமான தமிழர்களின் ஆதரவினால் இந்தக் கோயில் இப்படி வளர்ந்திருக்க முடியாது. கோவிலைத் தொழுவதும் ஆதரிப்பதும் தாய்லாந்தவர்கள்தான். மண்டியிட்டு அமர்ந்து கைகூப்பி சிரத்தையுடன் அம்மனை சேவிப்பது அற்புதமான காட்சி.

சனிக் கிழமை தோறும் கணபதி நாமாவளி, முருகன் நாமாவளி, நாராயணன் நாமாவளி, அம்மன், ஐய்யப்பன் நாமாவளி அத்தனையும் தாய்லாந்தவர்கள் மழலைத் தமிழில் சொல்ல, பஜனை நடக்கிறது. புரியாத மொழியாயிருந்

**ஆனந்த் ராகவ்**

# அலகு குத்தி... காவடி எடுத்து...





''வீரப்பன் வெளியிட்ட கேசட்டுல என்ன இருக்கு?''
''நல்லபடியா கேசட் பதிவு பண்ணிக் குடுக்கற ரிக்கார்டிஸ்ட் வேணும்... தகுதிக்கேற்ப சம்பளம் தரப்படும்னு அறிவிச்சுருக்கான்!''

— அம்பை தேவா

தாலும் பயபக்தியுடன் நாமாவளி சொல்லும் பாங்கு, பரவசப்படவைக்கிறது. அவர்களுக்காக ஸ்லோகங்களைத் தாய் மொழியில் எழுதி அச்சடித்த சிறிய புத்தகங்கள் கோயிலில் கிடைக்கின்றன.

## பாங்காக் நவராத்திரி

நவராத்திரி சமயத்தில் கோயில், அலங்கார விளக்குகள் ஜொலிக்க, வீதியெல்லாம் தோரணங்கள் கட்டி, விழாக் கோலம் பூணுகிறது. உச்சகட்டமாய் விஜயதசமி அன்று நடக்கும் தேர் ஊர்வலம், எல்லோராலும் பேசப்படுகிற ஒரு வைபவம்.

மாலை ஆறு மணிக்குத் தொடங்கும் ஊர்வலம் முடிய, காலை மூன்று மணி ஆகிறது. ஆறு மணிக்குப் பூஜை தொடங்கி அலங்கரிக்கப்பட்ட மூன்று தேர்கள் ஊர்வலம் போகத் தயாராயிருக்கின்றன. சிலோம் என்கிற ஜனசந்தடியுள்ள சாலையின் ஒரு பகுதியில், போக்குவரத்து நிறுத்தப்பட்டு, சாலையே ஒரு வழிபாட்டு ஸ்தலமாகிறது. வருடத்தின் அந்த ஒரு நாள் மட்டும் அங்கு போக்குவரத்து நிறுத்தப்படும். வழக்கம் போல் திரும்ப யத்தனிக்கும் கார்களை, விசில் ஊதி ஊதி அந்த அனுமார் வாய் போலீஸ்காரர் திருப்பி அனுப்பிக் களைக்கிறார். சாலையின் இறுதியில் இருபதுக்கும் மேற்பட்ட குப்பை வண்டிகள், ஊர்வலம் முடிந்தவுடன் சாலையைச் சுத்தம் செய்ய, யுத்தத்துக்கு மல்லுக்கு நிற்கும் பீரங்கிப் படை போல, தயார் நிலையில் நிற்கின்றன.

தாய்லாந்து ஆண்கள் நிறையப் பேர் வேஷ்டி துண்டு சகிதமும், வழக்கமாக குட்டைப் பாவாடை அணியும் தாய்லாந்துப் பெண்கள், சேலை, நகை சுமந்த வெட்கத்துடனும் வலம் வர, சாலையின் இரு பக்கங்களும் இருபது அடி இடைவெளியில் பக்தர்களின் நவராத்திரி கொலு. அம்மன், பிள்ளையார், நடராஜர், முருகர், கிருஷ்ணர், அர்த்தநாரீஸ்வரர் என்று அத்தனை இந்துக் கடவுள்களும் கொலு வீற்றிருக்க, ஐந்தடி உயரத்தில் ராட்சஸ மெழுகுவர்த்திகள் ஒளி வீச, தேங்காய், பூ, வாழைப் பழம், ஊதுபத்தி, டெட்ரா பாக்கெட் பால் அத்தனையும் வைத்துத் தயாராக இருக்கிறார்கள்.

கரகத்தோடு ஊர்வலம் தொடங்குகிறது. முதலில் வருவது முருகனின் தேர். அதன் பின்னே அலகு குத்தி, காவடி எடுத்து, ஆடி வரும் அந்த இந்திய பக்தரைப் பார்த்துக் கூட்டம் பரவசமாகிறது. வெள்ளையர்கள் சூம் கண்களால் இளிக்க, கன்னங்களைக் கிழித்து வேல் குத்திய அவர் காலில் விழுவதற்குக், கூட்டத்தினர் போட்டி போடுகிறார்கள். காலில் விழுவோரை ஆசிர்வதித்துக் கொண்டே காவடி நகருகிறது. காவடி ஆட்டத்துக்குப் பின்னணியாய் பாண்டு வாத்தியம். ஆட்டத்தின் ஆக்ரோஷம் உணர்ந்து, மிஷன் இம்பாஸிபிள், ஜேம்ஸ் பாண்ட், சிம்பொனி என்று உச்சஸ்தாயியில் அன்னிய ராகம் வாசித்துக் களையூட்டுகிறார்கள். அதன் பின்னே காத்தவராயன் தேர். தாரை தப்பட்டைகளை, சொல்லிக் கொடுத்த மாதிரி ஒரே சீராக அடிக்கும் அந்த தாய்லாந்து கோஷ்டி, பக்தி ஜுரம் பரப்புகிறது.

அம்மன் தேர் வரும் அழகே அழகு. பட்டுடுத்தி, பூக்களால் அலங்கரிக்கப்பட்டு, சூலம் தாங்கி, கிரீடத்தின் வைர ஜொலிப்புடன் அம்மன். நாதஸ்வர இசை முழங்க, தவில் பறை அதிர, பக்திப் பரவசத்தில் தேரின் வழியில் குவியும் மக்களை நகரச் சொல்லி போலீஸ் 'காப் காப்' என்று ஒலி பெருக்கியில் அலற, பெண்கள் சிலர் உணர்ச்சிவசப்பட்டுக் கண்ணீர் விட, அம்மன் ரதம் கூட்டத்தைக் கிழித்துக் கொண்டு வருகிறது.

தேரின் வடம் பத்தடி நீளமே இருக்க, அதற்கு முன் பக்தர்கள் கைகோத்து உருவாக்கிய வரிசை, தேரை இழுத்து வருகிறது. வரும் பாதையில் சரமாரியாய் நூற்றுக் கணக்கில் தேங்காய்கள் உடைக்கப்பட்டு சாலை நனைகிறது. கொஞ்ச தூரம் வந்ததும் நிறுத்தப்பட்டு, பக்தர்கள் அர்ச்சனைத் தட்டைச் சுமந்து வந்து வழிபடுகிறார்கள். ஐந்து நிமிட இடைவெளிக்குப் பிறகு "ஹே" என்ற இரைச்சலுடன் தேர் நகர்கிறது.

ஆயிரக்கணக்கான மக்கள் இரவு முழுக்கக் காத்திருந்து வழிபட, நவராத்திரிப் பண்டிகை தாய்லாந்தின் பண்டிகை போல ஆரவாரமாய் நடக்கிறது.

(தொடரும்)

வீட்டிற்கு ஒரு பசு வளர்ப்போம்! ஊருக்கு ஒரு கோசாலை அமைப்போம்!

# பசு (கோமாதா) பராமரிப்புக்கு உங்கள் அன்பு காணிக்கையை வழங்குங்கள்!

**ஆன்மீக அன்பர்களுக்கு வணக்கம்! கோமாதா தங்களுக்கு அனைத்து நலன்களையும் தந்தருளப் பிரார்த்திக்கிறோம்.**

இந்துக்களின் அனைத்து தெய்வங்களும் உள்ளடங்கிய "கோ" என்பது கோமாதாவாகிய "பசு" ஆகும். அது தாயைப் போன்றது. பிறந்த குழந்தைக்கு தாய்ப்பால் எவ்வளவு அவசியமோ அதற்கு நிகரான பசுவின் பால் குழந்தைப் பாதுகாப்புக்கு மிக அவசியமாகும். இத்தகைய புனிதமான காமதேனுவை - கோமாதாவை - பசுத்தாயை பராமரிப்பதும், பாதுகாப்பதும், பூஜைசெய்து வழிபடுவதும் ஒவ்வொரு இந்துவின் கடமையாகும். மேலும் பசுக்களை காப்பாற்றுவதே உண்மையான லட்சுமி பூஜை என்ற நல்லுணர்வுடனும், சமுதாய சிந்தனையுடனும் சென்னை திருவேற்காடு அருள்மிகு தேவி கருமாரியம்மன் திருக்கோவில் அருகில் "ஸ்ரீ கோசாலா சேவா டிரஸ்ட்" மூலம் பசுமடம் ஒன்றை பெருமாளகரம், திருவேற்காடு, சென்னை - 77 என்ற விலாசத்தில் ஏற்படுத்தியுள்ளோம். பசுக்களின் துன்பங்களைத் தனதுபோல் உணர்ந்து அவற்றைப் போக்கவும், மத்திய, மாநில அரசின் பசு வதை சட்டத்தை மதித்தும், குடும்பநலன் கருதியும் நமக்குப் பலவழிகளில் நன்மைதரும் பசுக்களை வாங்கி நமது பசுமடத்திற்கு அனுப்பிப் பாதுகாக்க, பராமரித்து பூஜை செய்து வழிபட, கொடுப்பதன் மூலம் தங்களுக்குக் கோமாதாவின் அருளைப்பெற இது ஒரு நல்ல வாய்ப்பாகும்.

நீங்கள் தானம் செய்யும் பசுவுக்கும், கன்றுக்கும் வைதீக முறைப்படி புரோகிதர்களை வைத்து நித்தம் பூஜைகள் உங்கள் பெயரில் நடத்தி வைக்கப்படுகிறது. மேலும் பசுத்தொழுவத்தில் கோமாதாக்களுக்கு நவீன விஞ்ஞான முறைப்படி பராமரிப்புகள், மின்விசிறிகள், வேதபாராயண ஸ்லோகங்கள், கர்நாடக தெய்வீகப்பாடல்கள் தொடர்ந்து ஒலிக்க ஒலிநாடாக்கள் இயக்கி வைக்கப்படுகிறது. இத்தகைய பராமரிப்புகள், வழிபாடுகள் அமைந்துள்ள கோசாலாவிற்கு கோதானம் செய்து கோமாதாவின் தெய்வீக அருளைப்பெற அன்புடன் அழைக்கிறோம். பசுவை பராமரித்து, பாதுகாத்து பூஜிக்கவும், பசுக்களின் தினப்படி ஆகாரங்களுக்கும், தீவனங்களுக்கும் தினம், வாரம், மாதம், வருடம் என முறைப்படியாகும் செலவுகளுக்கு உதவியளித்து கோமாதாவின் அருளைப்பெறுவதுடன் வாழ்வில் உயர்வும் பெற்றிடலாம்.

பசுத்தாயின் உடலில் மும்மூர்த்திகளும், 33 கோடி தேவர்களும், அனைத்துப் புண்ணிய தீர்த்தங்களும் குடிகொண்டுள்ளன. பசுவை வலம் வந்தால் எல்லா தெய்வங்களை வணங்கிய பலனும், எல்லாப் புண்ணிய நதிகளில் நீராடிய பலனும் தங்களுக்குக் கிடைக்கும் என்று வேதசாஸ்திரங்கள் சொல்கின்றன. பசுச்செல்வத்தின் உடல் புண்ணியத்தின் விளைநிலம். இறந்த நமது முன்னோர்களுக்கு உணவு அளிக்க விரும்பினால், பசுவிற்கு கொடுத்தால் போதும். அது நமது முன்னோர்களுக்குப் போய்விடும். பசுவின் சாணம் கிருமிநாசினியாகப் பயன்படுத்தப்பட்டு வருகிறது. பஞ்சகவ்யம் எனப்படும் பால், தயிர், நெய், கோமியம், சாணம் இவைகளில் இருந்து தயாரிக்கப்படும் மருந்து தீராத வியாதியாகிய கேன்சரைக் குணப்படுத்துகிறது. இப்படி நீதிப்படி பார்த்தாலும், விஞ்ஞானப்படி பார்த்தாலும் பல வழிகளில் நமக்கு நன்மை தரக்கூடிய பசுத்தாயைப் பாதுகாத்து வளர்க்க வேண்டியது மிகவும் அவசியமான ஒன்றாகும்."இறைவனுக்கு அபிஷேகமாகும் பாலையும், இறைவனின் திருமேனியை அலங்கரிக்கும் விபூதியையும், வேள்விகளுக்கான வரட்டியையும், நெய்யையும், பறை, பேரிகை முழங்க தன் தோலையும் வழங்குவது கோமாதாதான் என்பதை தாங்கள் நன்கு அறிவீர்கள்.

பசுவைப் பாதுகாத்து பராமரிக்க தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.

* ரூ.500/ - அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் ஒரு ஆண்டிற்கு அனுப்பி வைக்கப்படும்.
* ரூ.1000/ - அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
* ஒரு பசுவை பராமரிக்க ஆண்டிற்கு ரூ.5400/- தேவைப்படுகிறது. இந்த நன்கொடையை வழங்கும் ஆன்மீக அன்பர்கள் சார்பாக ஒரு பசுவை ஒரு ஆண்டிற்கு பராமரிப்பதுடன், தங்களை "Ghomadha Seva Scheme" "பசு சேவை திட்டம்" என்ற புனித அமைப்பில் சேர்த்துக் கொள்ளப்படுவதுடன் "ஆன்மீகம்" மாத இதழ் 10 ஆண்டுகளுக்கு தங்களுக்கு அனுப்பி வைக்கப்படும்.

ஆன்மீக அன்பர்கள் தங்களுடைய திருமண நாள், பிறந்த நாள், பிள்ளைகளின் பிறந்த நாள், பண்டிகை நாட்கள், விசேஷ நாட்கள், முன்னோர்கள் திதி நாட்கள் என தங்களுக்கு உகந்த நாட்களில் பசுவை தானமாகத் தரலாம். மேலும் இதுபோன்ற முக்கிய நாட்களில் தாங்கள் ''கோ பூஜை'' செய்ய விரும்பினால் அந்த நாட்களில் நமது ''ஸ்ரீ கோசாலா சேவா டிரஸ்ட்'' என்ற அமைப்பின் மூலம் சென்னை திருவேற்காட்டில் நிர்வகிக்கப்படும் ''பசுமடத்திற்கு'' குடும்பத்துடன் நேரில் வரலாம். குழந்தை இல்லாதவர்கள் 1 ஆண்டு பசு கன்று வளர்த்து சேவை செய்ய குறை நீங்கும். தீராத துன்பங்கள் குடும்ப பீடை உடையவர்கள் வெள்ளிக்கிழமை விரதமேற்று பூஜை செய்ய குடும்ப சுபிட்சம் ஏற்படும். திருமணம் ஆனவுடன் பசு ஒன்றை வளர்க்க தொடங்கிட மணமக்கள் மங்கள வாழ்வு பெறுவார்கள். பலவிதமான சாபத்தால் ஏற்பட்ட குறை நீங்க கோவில்கள், மடங்கள், அந்தணர்களுக்கு பசுதானம் செய்ய சாபம் விலகும். 108 பசுக்களை ஒரே நேரத்தில் தரிசித்தால் நூறு ஆண்டுகள் இறைவனை வழிபட்ட பயன் ஒரு நாளில் உண்டாகும். தொழில் விருத்தி, வியாபார விருத்தி, திருமணத்தடை, புத்திர பாக்யம், குடும்ப நலன் ஏற்பட கோமாதா பூஜை செய்ய குறை நீங்கி சுகவாழ்வு ஏற்படும்.

இறைச்சிக்காக பசு கொல்லப்படுவதை தடுக்கவும், குடும்பநலனுக்காக பசுக்களை காக்கவும், கோபூஜை செய்யவும், ஆன்மீக அன்பர்கள் பசுவைத் தானமாக கொடுக்கலாம் அல்லது பசுக்களை பாதுகாத்து பராமரிக்க தங்களால் இயன்ற அளவு நன்கொடையை Cheque/D.D/M.O மூலமாக Shri Ghosala Seva Trust என்ற பெயருக்கு மேற்கண்ட முகவரிக்கு அனுப்பி உதவுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

# பசுமடம்

## பசுக்கள் பாதுகாப்பு இல்லம்

( ஸ்ரீ கோசாலா சேவா டிரஸ்ட் மூலம் பராமரித்து பாதுகாக்கப்படுகிறது)

பெருமாளகரம், திருவேற்காடு (P.O), சென்னை - 600 077.

✆ : 4959302 Fax: 7102308 E-mail:sivasiva@vsnl.net

பசுவை தேசிய விலங்காக அறிவிக்க வேண்டும்!

ஜெயா டி.வி.யில் ஒளி பரப்பாகும் 'வீட்டுக்கு வீடு லூட்டி' தொடரில் நடிக்கிறவர்களிடம், ''உங்க சொந்த வாழ்க்கையில் நீங்கள் அடித்த லூட்டி ஒன்றைச் சொல்லுங்க'' என்று கேட்டபோது...

**பாம்பே ஞானம்:**

அப்போ நான் மாயவரத்தில் நாலாம் கிளாஸ் படிச்சுக்கிட்டிருந்தேன். எங்க வீட்டுக்குப் பக்கத்தில் ஒரு டெய்லர். அவர் கடைக்குப் போய், அவர் வெட்டிப் போட்ட பழைய துண்டுத் துணிகளைக் கொண்டு வந்து பொம்மை செய்து விளையாடுவேன். ஒரு தீபாவளி சமயம், டெய்லரிடம் துண்டுத் துணி கேட்டப்போ, பிஸியாக இருந்ததால், 'தர முடியாது போ'ன்னு சொல்லிட்டார். எனக்குக் கோபம் வந்து, அவர் கடையில் இருந்த புது டெர்லின் சட்டைத் துணியை எடுத்துக் கிட்டு, வீட்டுக்கு வந்துட்டேன். வீட்டுல, கத்திரிக்கோலை வைச்சுக்கிட்டு அந்த புதுச் சட்டைத் துணியோட ஒரு பகுதியை பீஸ் பீஸாக கட் பண்ணி எடுத்துக்கிட்டு, பாக்கித் துணியைக் கொண்டு போய்த் திருப்பிக் கொடுத்துட்டேன். டெய்லருக்கு ஒரே அதிர்ச்சி! வீட்டுக்கு வந்து, எக்கச்சக்கமாய் எகிற, கடைசியில், சட்டைத் துணிக்குரிய பணத்தைக் கொடுக்க வேண்டியதாப் போச்சு! அம்மாவிடம்



• உமா பத்மநாபன்



• பாம்பே ஞானம்

• சச்சு

எனக்கு செமை அடி!

**குமாரி சச்சு:**

குழந்தை நட்சத்திரமா இருந்ததால, நான் எல்லாருக்கும் செல்லம். எங்க வீட்டுக்கு யார் காரில் வந்தாலும், என்னைக் காரில் உட்கார வைத்து, ஒரு ரவுண்டு அழைச்சுக்கிட்டுப் போகச் சொல்வேன். அப்படித்தான் ஒரு நாள், ஒரு நண்பர் வந்திருந்தார். நான் காரில் ரவுண்டு போகணும்னு கேட்டேன். "அவசரமா போகணும். இன்னொரு நாள் அழைச்சிட்டுப் போறேன்"னு மறுத்துட்டாரு. எனக்கு வந்ததே கோபம்.

யாருக்கும் தெரியாம, காரின் நான்கு சக்கரங்களிலும், 'பின்' வைத்து அழுத்தி காற்றை இறக்கி விட்டுட்டு எஸ்கேப் ஆயிட்டேன்.

நாலு டயரும் எப்படி திடீர்னு பஞ்சராகும்னு எல்லாரும் மண்டையைப் பிச்சுக்கிட்டாங்க! இதுபோல நிறைய லூட்டி அடிச்சிருக்கேன்.



• ப்ரீத்தி

# லூட்டீம்... லூட்டி!

**'பூ விலங்கு' மோகன்:**

தி.நகர் ஹைஸ்கூலில் நான் படிச்சுக் கிட்டிருந்த சமயம். ஸ்கூல் யூனிபாரம் போடாம, பபூன் ஸ்டைல் பாண்ட் போட்டுக்கிட்டுப் போனேன். கிளாஸில் நுழைஞ்சவுடனேயே ஒரே கலாட்டா. வாத்தியார் வந்தார். ஏன் யூனிபாரம் போடலைன்னு பெஞ்ச் மேலே ஏத்திட்டார். பெஞ்ச் மேலே பபூன் போல நிக்கறதைப் பார்த்துட்டு, 'கொல்'ன்னு சிரிப்பு. கிளாஸை விட்டு வெளியே போகச் சொன்னார். நானும் வாசல்படிக்கு வெளியில் நின்னுக்கிட்டேன். ஆனாலும் சிரிப்பு தொடர, வாத்தியாருக்கு வந்ததே கோபம். "இந்த பேண்ட்டால் எத்தனை கலாட்டா பார்த்தியா? உன்னை..." என்று மேஜை மீது இருந்த கொம்பை அவர் எடுக்கப் போக, நான், சர் என்று, பபூன் பாண்ட்டை உருவி, மடித்து கையில் வைச்சுக்கிட்டு

நின்னேன். உள்ளே யூனிபார்ம் டிராயர். மறுபடி ஒரே சிரிப்பு! ஆசிரியரும் அதில் சேர்ந்து கொண்டார். வேறே வழி?

**ப்ரீத்தி:**

'இரண்டு நாள் முன்பு, ஹூட்டி தொடரில் நடிக்கிற பிரஷாந்த் எங்க வீட்டுக்கு வந்திருந்தார். நானும் என் அண்ணனும் சேர்ந்து, பிரஷாந்தை வெறுப்பேத்த மெகா பிளான் திட்டினோம்.

பிரஷாந்த் பேசிக்கிட்டு இருந்துட்டு புறப்படுகிறபோது பார்த்தால், அவன் பைக்கைக் காணோம்! அவனுக்கு ஷாக்! 'பைக்கை எங்கேயோ, வைச்சுட்டு இங்க வந்து தேடறியே?"ன்னு கலாட்டா பண்ணினோம். அவன் பைக்கில்தான் வந்தேன்னு பேய் விழி விழிக்கிறான். அடுத்த பத்து நிமிஷங்களுக்கு பயங்கர டீஸிங்தான்! கடைசியில், அங்கேயே உறை போட்டு மூடி வைத்திருந்த பைக்கை கை காட்டினோம். நொந்து போய்விட்டான் எங்கள் ஹூட்டியில்!

**உமா பத்மநாபன்:**

நான் மட்டுமில்லாமல், எங்கள் குடும்பத்தினர் அனைவரும் சேர்ந்து அடித்த ஹூட்டி ஒன்றைச் சொல்லட்டுமா? வீட்டில் விசேஷம். உறவினர்கள் நிறையப் பேர் வந்திருந்தார்கள். நாங்கள் நாலு பேர் கேரம் போர்டு ஆடிக் கொண்டிருந்தோம். இரவு நேரம். திடீரென்று பவர்கட்.

எங்கள் சைடு எக்கச்சக்கமாக மண்ணைக் கவ்வுகிற நிலை. நான் தமாஷாக, இரண்டு காயின்களை எடுத்து வைத்துக்கொண்டேன். இரண்டு நிமிடங்களில் பவர் வந்தது. நாலு பேரும், திருதிருவென ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டோம். காரணம், ஆளுக்கு இரண்டு காய்களை அபேஸ் பண்ணியிருக்க, மொத்தத்தில் கேரம் போர்டு காலி!

தொகுப்பு: எஸ். சந்திரமௌலி



உலகம் எப்போதும் சுழன்று கொண்டே இருக்கு. எந்த இங்கிலீஷ் காரனும் சொல்லிக் கொடுத்து நாம தெரிஞ் சுக்கல்லே. நமக்கு முன்னாடியே தெரியும். உலகத்தைக் குறிக்கிற ஜகத் என்ற சொல்லுக்கே நகர்வது, சுழல்வதுன்னுதான் அர்த்தம். அதாவது, மாறுதல் – இயக்கம் இருந்து கொண்டுதான் இருக்கும்.

– காஞ்சி மாமுனிவர்

அரங்கம் மாதர்குல திலகங்களால் நிரம்பி வழிந்து கொண்டிருந்தது.

# ஜகத்

தலைநகரிலிருந்து சமூக மேம்பாட்டுத் துறை அமைச்சர் வருகிறார் என்பதால், பாதுகாப்புக் கெடுபிடி கடுமையாக இருந்தது.

நிகழ்ச்சிப் பொறுப்பில் இருந்த விஜயா ராஜாராமன், நந்தினி நாகநாதன், ப்ரத்யூஷாவும் மற்ற துணைப் பொறுப்பாளர்களும் பம்பரமாய்ச் சுழன்று கொண்டிருந்தார்கள்.

பின்னே, இருக்காதா?

அன்றைய நிகழ்ச்சி என்ன, ஏதோ ஒரு வருடாந்திர விழாவா? – பட்டுப் புடைவையும் வைரத் தோடுமாக வந்து விருந்து சாப்பிட்டு விட்டுப் போக?

பாராட்டு விழா.

– கே.கே.நகர் காஞ்சனா கண்ணப்பனுக்கும் ஜே.ஜே.நகர் ஜெயந்தி வெங்கடேசுவரனுக்கும்.

பட்டணத்திலுள்ள அத்தனை மகளிர் சங்கங்களும் அரங்கத்தில் சங்கமித்திருந்தன.

கல்லூரிப் பேராசிரியை காஞ்சனா, அண்மையில் தான்

**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட வைட்டமின் சிறுகதை — 13**

ஜப்பானிலிருந்து திரும்பியிருந்தார். ஆசிய நாடுகளின் பற்பல பல்கலைக் கழகங்களிலிருந்து ஆங்கிலம் பயில்விக்கும் பேராசிரியர்களுக்கான தொழிற்பட்டறை ஒன்றை, ஓர் அகில உலக ஆங்கில வளர்ச்சி நிறுவனம் ஏற்பாடு செய்திருந்தது. இந்தியாவிலிருந்து சென்ற ஆறு பேர்களில் காஞ்சனாவும் ஒருவர்.

ஏதோ போனோம், பாடம் கேட்டோம், ஊர் சுற்றிப் பார்த்தோம், ஒரு சான்றிதழ் வாங்கிக் கொண்டு வந்தோம் – என்று, 'சமர்த்தாக' வந்திருக்கப்படாதோ? தனக்குக் கிடைத்த நேரத்தில் புறநானூற்றை ஆங்கிலப் படுத்திக் கூறப் போக, அடிக்கடி அவளையே பேச அழைக்க, இலக்கிய உரையாடல்கள் கொடி கட்டிப் பறக்க, அங்கேயும் இங்கேயும் பல்கலைக் கழகங்கள் சிறப்புச் சொற்பொழிவுக்கு அழைக்க, உலக நிறுவனம் அவளுக்கு இரண்டு உதவியாளர்களை அமர்த்திக் கொடுக்க... பதினைந்து நாள் என்று போய், ஒன்றரை மாதம் கழித்துக் காஞ்சனா திரும்பி வந்த போது, அவளுடைய லக்கேஜுக்கு ஒரு லாரி தேவைப்பட்டது!

இந்த அம்மையாரைப் பாராட்ட வேண்டுமா, வேண்டாமா?

**கே.**கே.நகர் வாசி இப்படியென்றால் ஜே.ஜே.நகர்க்கார அம்மாள், இன்னும் ஒருபடி மேலே.

விஷயம் ஒன்றுமில்லை. வெறும், 'ப்யூட்டி'!

பட்டணத்திலுள்ள ப்யூட்டி பார்லர்களில் முதன்மையானது, ஜெயந்தியுடையதுதான்.

பார்லருக்குள் நுழைந்து விட்டால், ஏதோ ஒரு நவீன பொருட்காட்சி சாலையில் புகுந்து விட்டாற்போல், ஜில்லென்றிருக்கும்!

பதினெட்டிலிருந்து முப்பத்தெட்டு (ஏன், அதற்கு மேலும்) வயதுள்ள பெண்களின், 'உங்கள் சாய்ஸ்', 'தி காந்தர்வீ'.

ஜெயந்தி கத்திரிக்கோல் பிடிக்கக் கற்றுக் கொண்டதெல்லாம், பாரீஸில். 'அதெல்லாம்

**சியாமளா நாராயணன்**

வேண்டாண்டி. மெடிகல், இஞ்ஜினீயரிங் படி...' என்று அம்மா சொன்னதைக் கேட்டாளா?

இப்போ என்ன ஆயிற்று?

பிரிட்டிஷ் மகாராணியின் குடும்பத்துப் பெண்களுக்கு அழகு சாதனக் குறிப்புகள் கொடுத்து, அரசியின் கைப்பட லெட்டர் வாங்கிக் கொண்டு வந்திருக்கிறாள்!

லண்டனுக்குப் போனாள்



ஷாப்பிங். அவ்வளவுதான்! முப்பத்து எட்டை, பதினெட்டாகக் காட்டுவதற்கு என்னென்ன புதிய சரக்குகள் மார்க்கெட்டுக்கு வந்திருந் தனவோ அவற்றை அள்ளிக் கொண்டாள். அப் போது தற்செயலாக ஒரு பெண்மணியைப் பார்க்க, அவர் முகத்தில் இருந்த ஒரு புள்ளி இவள் கண்ணில் பட, இருவரும் பரஸ்பரம் உற்றுப் பார்க்க, இவள் வலியச் சென்று, 'எக்ஸ்க்யூஸ் மீ' என்று பேசப் போக, அவர் பிரிட்டிஷ் அரசியின் குடும்பத்தைச் சேர்ந்த வராக இருக்க...

ஜெயந்தி திரும்பி வந்தபோது (போன மாதம்தான்) பை நிறைய – மன்னிக்கவும், சாக்குப் பை நிறைய – காசு!

மாலைகள், சால்வைகள், கேடயங்கள், பாராட்டுப் பத்திரங்கள் என்று பொழிந்து, காஞ்சனாவையும் ஜெயந்தியையும் திக்கு முக்காட வைத்தாகிவிட்டது.

நிகழ்ச்சித் தொகுப்பாளி மாலினி, ஒலி பெருக்கி முன் வந்து நின்றாள்.

"தன்னிகரற்ற உலகச் சிறப்பினைப் பெற்று வந்துள்ள இரண்டு சகோதரிகளையும் பாராட்டி மகிழ்ந்தோம். நமக்கே இவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கும் போது, இவ் விரண்டு பெண் முத்துக்களையும் பெற்றெடுத்த அன்னையருக்கு ஏற்படும் மகிழ்ச்சிக்கு அளவே கூற முடியாது. இதோ, என் எதிரே, உங்களி டையே அமரிக்கையாக அமர்ந்திருக்கும் அவ்விரு தாய்மார்களையும் கண்டு, மனத்தால் போற்றுகிறேன். நீங்களும் அவர்களைப் பார்க்க வேண்டும் என்று மிகவும் விரும்புவீர்கள். எனவே, பெண்மணிகளைப் பெற்ற தாயார் இருவரையும் மேடைக்கு வரும்படி உங்கள் சார்பில் பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன்..."

கைதட்டல், அலையோசையென ஆர்ப் பரிக்க...

முன்வரிசையில் அமர்ந்திருந்த,

'.......அட! இவர்தான் காஞ்சனாவின் தாயாரா? அடேடே! பக்கத்திலேயே உட் கார்ந் திருந்தும் ஒரு வார்த்தை கூட பேசாமலிருந்து விட்டேனே?'

– என்று, ஓர் அம்மையார் எண்ணும் போதே,

'அட!........இவங்க தான் ஜெயந்தியோட அம்மாவா?........அப்பவே பிடிச்சு, விழிச்சுப் பார்த்துக்கிட்டிருந்தேனே தவிர, பேசத் தோண லையே?..'

தாய்மார்கள் இருவரும் மேடைக்கு வந்ததும் மத்திய அமைச்சரால் மாலை அணிவிக்கப்பட் டார்கள். பின், அருகருகே இரண்டு சிறப்பு இருக்கைகளில் உட்கார வைக்கப்பட்டார்கள்.

"நீங்க காஞ்சனாவின் அம்மாவா?"

"ஆமாங்க... பக்கத்திலே உங்களைப் பார்த் தப்போ, பேசணும் போல தோணிச்சு... பெரிய ஆபீசர்னு நெனச்சு பேசாம இருந்துட்டேன்..."

"உங்களுக்கு எந்த ஊரு?"

"களஞ்சேரி...."

"எந்தக் களஞ்சேரி?"

"சாலியமங்கலத்துக்குப் பக்கத்திலே..."

அம்மாள் பரபரப்படைந்தார்.

"அங்க யார் வீடு?"

"குடியானத் தெரு.... எங்கப்பா, நடே சன்னு..." அம்மாள் சுற்றுப்புறத்தை மறந்தார்.

".......பொன்னம்மாவாடி, நீ?..."

"ஆமாங்க.... நீங்க... நீங்க..."

"கோபால வாத்தியார் பொண்ணு..."

".......அ.... அனந்தலட்சுமி?"

நான்கு கைகளும் இரண்டு இதயங்களும் பின்னிப் பிணைந்து காலவெள்ளத்தில் எதிர்நீச்சல் போட்டன.

களஞ்சேரி வட்டாரத்தில் கோபால வாத்தியாரைத் தெரியாதவர் இருக்க முடியாது. முதலில் ஓராசிரியர் பள்ளியாகத் தொடங்கி யது. கிராமத்துப் பெருமாளின் பெயர்: 'கல் யாண கிருஷ்ணன் தொடக்கப் பள்ளி.'

கோபாலய்யருக்கு எல்லாம் சுத்தம் – வாக்கு, கை, மனசு. கிராமத்தின் முடிசூடாத மன்னர்.

"பிள்ளைவாள்... பள்ளிக் கூட கூரை ஒழுகறது... கீத்து போட்டா தேவலை..."

"செய்துடுவோங்க..."

"வாண்டையார் – ஐயா – சரஸ்வதி பூஜை அன்னிக்கு, பூசை பண் ணனும்... – சரிங்க –



"ஆனாலும் அந்த டாக்டர் ரொம்ப மோசம்."

"ஏன் அப்படிச் சொல்றீங்க?"

"கிளினிக்ல, 'நன்றி! மீண்டும் வருக!'ன்னு எழுதி வைச்சிருக்காரு!"

– சீர்காழி வி. ரேவதி

தேங்கா, பூ – பழம், நைவேத்யம்.... – செய்யறேனுங்க..''

– இப்படித்தான், ஆரம்பப் பள்ளி, நடு நிலைப் பள்ளி ஆயிற்று.

"கும்பிடறேங்க..''

கோபாலய்யர் திரும்பினார்.

நடேசன்.

தாடையைத் தடவிக் கொண்டார், கோபாலய்யர். அரை அங்குல முட்புதர் விரல்களைப் பிராண்டியது.

'என்னடா, பண்றது?.... நடேசா... எனக்கு நேரம் கிடைச்சா, நாள் நன்னாயில்லே! நாள், திதி சரியாயிருந்தா எனக்கு நேரம் கிடைக்கல்லே!... சரி... நாளைக்கு சப்தமி, புதன்கிழமை. வந்துடு..''

வந்தான். தலையில் தண்ணீர் தெளித்து குடுமியின் வட்டம் பிசகாமல் வழித்துக் கொண்டிருக்கும் போதே, குனிந்த தலையுடன் கோபாலய்யர் கேட்டார்.

'ஏண்டா, உன் பொண்ணுக்கு என்னாச்சு..... போன வாரத்திலேர்ந்து ஸ்கூலுக்கு வரலே?....... அனந்த லட்சுமியைக் கேட்டேன். தெரியாதுன்னுட்டா..!

கத்தியை சாணைக் கல்லில் உரசிக் கொண்டிருந்தான், நடேசன்.

"அது இனிமே வராதுங்க..''

"ஏண்டா?''

''.......வயசுக்கு வந்திடுச்சுங்க..''

"அதனாலே?''

"வெளியே அனுப்பமாட்டாங்க..''

''எங்க வீட்டுப் பொண்ணுக்கும் அதே வயசு; அதே கிளாசு..!

நடேசன் தயங்கிக் கொண்டே சொன்னான்:

''.......எம் மச்சான் ஒத்துக்க மாட்டாருங்க...!''

"அடப் பாவமே!... பொண்ணுங்க படிக்கணும்டா... சொல்லிப் பாரு, அவன்கிட்ட....''

நடேசன் தன் மைத்துனனிடம் சொன்னானா என்பதே கோபாலய்யருக்குத் தெரியாமற்போய்விட்டது. அடுத்த மாதம், வழக்கப்படி, அவரை மழிப்பதற்கு வாய்ப்புக் கிடைக்கவில்லை. மாறாக, அவரை தகனம் செய்துவிட்டு வந்த மூத்த பிள்ளை ராமகிருஷ்ணனுக்கு முகச்சவரம் செய்தான், கண்ணீரும் கம்பலையுமாக.

எல்லாம் முடிந்து, சாவகாசமாக வந்து, வீட்டைக் காலி பண்ணிக் கொண்டு, அம்மா – தங்கையை அழைத்துக் கொண்டு, அப்போது அவன் வேலை பார்த்துக் கொண்டிருந்த மதுரைக்குப் போய்விட்டான், ராமகிருஷ்ணன்.



''முன்னாள் அமைச்சர் அவர்களே வருக... மிக...மிக...மிக... முன்னாள் அமைச்சர் அவர்களும் வருக...

– தமிழ்

ஒலிபெருக்கியில், 'ஜனகனமன'.

எல்லோரும் எழுந்து நின்றார்கள்.

பின்னர், கை குலுக்கல், பாராட்டுரைகள், 'ரொம்ப தாங்ஸ்'கள், 'வி வில் மீட்..'

'ஜெயந்தி, நானும் பொன்னம்மாவும் அம்பது வருஷமா ப்ரண்ட்ஸ்..!

"ஓ!.......வாட் எ ப்ளெஸன்ட் ஸர்ப்ரைஸ்..''

"காஞ்சனா...'' என்று மகளை அழைத்தார், பொன்னம்மாள். "அம்மா கால்லே விழுந்து ஆசீர்வாதம் வாங்கிக்க... நாங்க ஒண்ணா படிச்சோம்... இவங்க அப்பா தான் எனக்கு வாத்தியார்..''

காஞ்சனாவைக் கட்டி அணைத்துக் கொண்டார், அனந்தலட்சுமி.

இளைய தலைமுறை பின்னே வர, முதிய தலைமுறை வாகனத்தை நோக்கிப் போய்க் கொண்டிருந்தது.

சட்டென்று நின்றார், அனந்த லட்சுமி.

''பொன்னம்மா... ஒரு வேடிக்கை பார்த்தியா? உலகம் எவ்வளவு வேகமா சுழன்று கொண்டேயிருக்கு!... பாரு... சாக்பீஸ் பிடிக்கப் போறான்னு நினைச்சு வளர்த்த என் பொண்ணு, கையிலே கத்திரிக் கோலைப் பிடிக்கிறா!... கத்தியைப் பிடிச்சவனோட பேத்தி, காலேஜ் புரொபசர்!... என்ன சந்தோஷமா இருக்கு, தெரியுமா?......''

".........அப்புறமா, பொண்ணை அழைச்சிண்டு வீட்டுக்கு வா....''

கண்களில் நீர் எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தது. 'சரி' என்று தலையை அசைத்தார், பொன்னம்மாள்.

**உலகம் எப்போதும் சுழன்று கொண்டே இருக்கு... உலகத்தைக் குறிக்கிற ஜகத் என்ற சொல்லுக்கே நகர்வது, சுழல்வதுன்னு தான் அர்த்தம். அதாவது, மாறுதல் இயக்கம் இருந்துண்டுதான் இருக்கும்.**

**– காஞ்சி மாமுனிவர்**




• காசோலை



• முதல்வரிடம் காசோலை பெறும் வள்ளியப்பன்

# முதல்வரின் அதிவேகம்!

**சோ**கம் கப்பிக்கிடந்த வள்ளியப்பனின் இளைத்த முகத்தில் இப்போது சந்தோஷ வெளிச்சம். "நம்ம ஊரு, நம்ம ஆறுன்னுதான் இறங்கி செஞ்சேன். பிரதிபலனை எதிர்பார்க்கலே... ஆனா அம்மாவோட பெருந்தன்மைக்கும், கருணைக்கும் முன்னாலே நான் செஞ்சது ஒண்ணுமேயில்லீங்க... அவங்க தீர்க்காயிசா நல்லா இருக்கணும்" வள்ளியப்பன் வாயார வாழ்த்துவது மாண்புமிகு தமிழக முதல்வரை.

**க**டந்த நவம்பர் பதினேழாம் தேதி 'கல்கி'யில் இடம் பெற்றிருந்த 'அரசுக்கு அஞ்சு லட்சம் மிச்சம்' என்ற கட்டுரையைப் படித்து நெகிழ்ந்த முதல்வர், வள்ளியப்பனின் தொண்டினைப் பாராட்டி, ஊக்குவிக்க உடன் அவரை சென்னைக்கு அழைத்துவர ஏற்பாடு செய்யும்படி, திருச்சி மாவட்ட ஆட்சியர் மணிவாசனுக்கு உத்தரவிட்டிருக்கிறார். மாவட்ட ஆட்சியர், முசிறி தாலுகா வட்டாட்சியர் சுந்தரமூர்த்தியைத் தொடர்பு கொள்ள, வட்டாட்சியர் உடனடியாக துணை வட்டாட்சியர் ராஜேசேகரனை அய்யம்பாளையம் கிராமத்திற்கு அனுப்ப, ராஜசேகரன் அய்யம்பாளையம் கிராம நிர்வாக அலுவலர் பாலசேகரனைக் கூட்டிக் கொண்டு, ஏழை விவசாயி வள்ளியப்பன் வீட்டிற்குச் சென்றிருக்கிறார்.

"காவிரி ஆற்றின் குறுக்கே ஏழு கிலோமீட்டர் தூரம் மண்டிக்கிடந்த காட்டாமணக்குச் செடிகளை வேரோடு பிடுங்கி அழித்தது நீங்கள்தானே?" என்று அதட்டலாகக் கேட்டிருக்கிறார்கள்.

"முசிறி தாசில்தார் அலுவலகத்திலிருந்து வருகிறோம்... காட்டாமணக்கை நீங்கள்தான் அகற்றியிருக்கிறீர்கள் என்பதற்கு இதோ உங்கள் ஊர் வி.ஏ.ஓ சாட்சி" என்றதும்... "அனுமதி வாங்காமல் அழிச்சது தப்புதான்... அதுக்காக அதை எப்படி அழிக்காமல் விடறது?" என்று கொஞ்சம் பயத்துடன் பதில் சொல்லியிருக்கிறார்.

அதன் பிறகு அவரது பதற்றத்தைத் தணித்து, முதல்வரிடமிருந்து அழைப்பு வந்திருப்பதைச் சொன்னதும், நம்ப முடியாமல் திகைத்த வள்ளியப்பன், அவர்களோடு சென்னைக்குக் கிளம்பி வந்து, கடந்த நவம்பர் பதினெட்டாம் தேதி முதல்வரைச் சந்தித்திருக்கிறார். வள்ளியப்பனின் பொதுத் தொண்டைப் பாராட்டி, ரூபாய் மூன்று லட்சத்தை ஒரே காசோலையாக, தமது பொது நிவாரண நிதியிலிருந்து வழங்கி கௌரவித்திருக்கிறார் முதல்வர்.



• வள்ளியப்பன்

"**மு**தல்லே என்னை உட்காரச் சொல்லி கௌரவப்படுத்தினாங்க... வேறு என்ன வேணும்ன்னு கேட்டாங்க... உங்களைப் பார்த்ததே பெரிய கௌரவம்னு சொன்னேன். ப்ளஸ் டூ படிக்கிற என் மகனுக்கு வேலைக்கு ஏற்பாடு செய்யறதாகவும், முசிறியிலே எனக்கு வீடு தர்றதாவும் சொல்லியிருக்காங்க.

"இனிமே என்னங்க, உடம்புல தெம்பு இருக்கிற வரைக்கும் தொண்டு செஞ்சுகிட்டே இருப்பேன்" என்று கண்கலங்கும் வள்ளியப்பனுக்கு, மூன்று பெண்கள், ஒரு மகன்.

— ஜே.ஜெ.

படங்கள்: ராஜன்

# கட்டப்பஞ்சாயத்துக்குக் காரணம் என்ன?

● ஆர்.மாதவராமன், கிருஷ்ணகிரி

? புதிய கோயம்பேடு பேருந்து நிலையம் முறையே யாருக்குச் சாதகம்? யாருக்கு பாதகம்?

! சாதகம் சென்னை நகரில் சாலைப் போக்குவரத்துக்கு; பாதகம் பஸ் பயணிக்கு.

● டி. காமாட்சி, மயிலாடுதுறை

? காவிரி ஆணையத்தையும் பிரதமரையும் தவறாகப் பேசியதற்காக சுப்ரீம் கோர்ட் முதல்வர் ஜெயலலிதாவுக்கும் குட்டு வைத்துள்ளது குறித்து...?

! அங்கே ஒரு குட்டு இங்கே ஒரு குட்டு என்றாலும் முதல் குட்டில் இருந்த அழுத்தம் இரண்டாவதில் கிடையாது. ஏனென்றால் முதலில் நடந்தது அநியாயம்; இரண்டாவது அனுசிதம்.

● புளியரை கணேசன், சென்னை - 30

? தமிழக பள்ளிகளில் ஏறத்தாழ 12,000 ஆசிரியர் பணியிடங்கள் காலியாக உள்ளனவாம்; எப்படி சார் கல்வித்தரம் உயரும்?

! ஆசிரியர் பணியிடங்களை நிரப்பினால் போதாது. தரம் உயர, ஆசிரியர் பணிக்கான தேர்வு இன்னும் அர்த்த முள்ளதாக்கப்பட வேண்டும்.

● ஆர். அப்துல் சலாம், திருச்சி - 21

? ராகுல் காந்தி அரசியலுக்கு வருவது காலத்தின் கட்டாயமாகி விட்டதே?



● கட்டாய காந்தி!



● ... அனுசிதம்!



● லேட்டஸ்ட் ஃபேஷனில்...

! நிருத்தம். காலத்தின் கட்டாயம் அல்ல; குடும்ப வாரிசு அரசியலின் கட்டாயம்.

● உமரி. பொ.கணேசன், மும்பை - 37

? இந்தியாவில் எய்ட்ஸைத் தடுக்க 500 கோடி ரூபாய் கொடுத்துள்ளாரே பில் கேட்ஸ் - இது பற்றித் தங்கள் கருத்து என்ன..?

! அந்த தாராள மனப்பான்மையைப் போற்றத்தான் வேண்டும் என்றாலும், அதனையும் ஒரு முதலீடாகக் கருதமாட்டார் என்பது உறுதியில்லை. பிரமோத் மகாஜனுக்கு நினைவூட்டுகிறேன் : "இந்தியாவும் இந்திய வல்லுனர்களும் இல்லையெனில் அமெரிக்காவில் கம்ப்யூட்டர் தொடர்பான தொழில்கள் படுத்துவிடும்'' என்று பில் கேட்ஸ் முன்பு ஒரு சமயம் கூறியிருக்கிறார்.

● விளாசலும் விபரீதமும்

● வி.ரூபஸ், கோவை

? பிழைக்கத்

தெரிந்தவர் யார்?...

! ராஜ்கோட்டிலிருந்து மணி நகர் தொகுதிக்கு மாற்றல் வாங்கிக் கொண்ட மோடி!

● வீ. மாயாதேவி, மயிலாடுதுறை

? தவறு செய்த, மற்றும் பொறுப்பில்லாமல் நடந்து கொள்ளும் அமைச்சர்களைத் தானே ஜெ. மாற்றுகிறார். இதனை அனைத்து பத்திரிகைகளும் கிண்டல் செய்வது ஏன்...?

! தவறு செய்யாத, பொறுப்புடன் நடந்து கொள்கிற, திறமைமிக்க மனிதர்கள் அ.தி.மு.க.வில் அரிது என்பது இதனால் தெரியவருவதால், கிண்டலுக்கு உள்ளாகிறார்.

● கீதா, சென்னை - 4 ❐

? மத்திய சுகாதார அமைச்சர் ஷத்ருகன் சின்ஹா, பிரதமரின் ஒப்புதலுடன் போலீஸ் ஃபோர்ஸ் என்னும் ஹிந்திப் படத்தில் நடிக்கப் போகிறாராமே?



● மனித நேய முதலீடு!



● மாற்றல் மகாத்மியம்

! இதற்கு என்.டி.ஆர். வடிவில் ஒரு முன்னுதாரணம் உள்ளது என்றாலும் அது மோசமான முன்னுதாரணம்; தவிர்ப்பதே நல்லது.

● பஞ்சவண்ண மகன், கருப்பம்புலம்

? மற்ற நாடுகள் பயன்படுத்தினால் இந்தியாவும் அணு ஆயுதங்களைப் பயன்படுத்தும் என்கிறாரே அப்துல் கலாம்? துணிச்சல்தானே?

! அணு ஆயுதங்களை யார் பயன்படுத்தினாலும் அதில் துணிச்சல் இல்லை; தற்கொலைதான். அணு ஆயுதங்களை ஒழித்துக்கட்டத்தான் துணிவும் புத்திசாலித்தனமும் உழைப்பும் தேவை. இதைத்தான் கலாம் வற்புறுத்தி, அதற்காகப் பாடுபடவும் வேண்டும்.



● தற்கொலைக் கொள்கை

● பொன் விழி, அன்னூர்

? இனி தங்கர் பச்சான் படம் என்றால் டிஸ்டிங்ஷன்தானா?

! மக்களின் வாழ்க்கையிலிருந்து பெறப்படும் கதை; அந்தக் கதையை கௌரவப் படுத்தும் விதமாகத் திரைக்கதை; யதார்த்தத்திலிருந்து விலகாத பாத்திரப் படைப்புகள்; நடைமுறை வாழ்வைப் பிரதிபலிக்கும் காட்சி அமைப்புகள்; நிஜ வாழ்வில் பேசும் மொழியிலேயே வசனம்; ஒரு கதாபாத்திர அந்தஸ்து வகிக்கும் இசை; சித்து வேலையோ ஜிகினாத்தனமோ செய்யாத ஒளியமைப்பு, ... இப்படி யார் படமெடுத்தாலும் தாராளமாய் டிஸ்டிங்ஷன் தரலாமுங்க.

● இரா. வேல்முருகன், மகுடஞ்சாவடி

? ராஜ்காட்டில் ஷேவாக்கின் விளாசலை முழு மனத்தோடு ரசித்தீர்களா...?

! முழு மனத்தோடு ரசிக்க முடியாதபடி ரசிகர்களின் நடத்தை மனத்தில் கசப்புணர்வையும் பெருகச் செய்துவிட்டதே.

● டி. சுப்ரமணியன், மேலையூர்

? சென்னை மழை வெள்ளத்தைப் பார்வையிட ஹெலிகாப்டரில் வந்த முதல்வர் காரைப் பயன்படுத்தி செலவைக் குறைத்திருக்கலாம் அல்லவா...?

! அவர் காருக்குப் பின்னால் 20 - 30 கார் தொடர்வதில் ஏற்படும் பெட்ரோல்

---

❐ ரூ.100 பரிசு பெறுபவர் :

**கீதா,**
**பிளாக் 9 ஏ. 46,**
**ரோஸரி சர்ச் சாலை,**
**சென்னை - 600 004.**


* முதல் குட்டு!

செலவைவிட ஹெலிகாப்டர் செலவு குறைவாகத்தான் இருக்கும்! மக்களுக்குத் தொல்லையும் குறைவு.

● மு. பெரியசாமி, விட்டுக்கட்டி

**? இலங்கைத் தமிழர் மீது இருபது ஆண்டுகளாக நடத்திய தாக்குதலுக்கு வருத்தம் தெரிவித்துள்ளாரே அதிபர் சந்திரிகா?**

! அடித்து நொறுக்கி விட்டு வருத்தம் தெரிவிப்பது இப்போது ஃபேஷன். ஜப்பான் ஆரம்பித்து வைத்தது. அமெரிக்கா - பிரிட்டன் பின் தொடர்ந்தது. இப்போது... ஸ்ரீலங்கா.

● இரா.சக்கரபாணி, மதுரை - 7

**? தமிழகத்திலுள்ள நிதி நெருக்கடியில் 27 அமைச்சர் பதவிகள் தேவைதானா...?**

! 18 மாதங்களுக்குள் 18 அமைச்சர்களை மாற்றி 27 அமைச்சர் பதவிகளை உருவாக்கி - கூட்டுத் தொகை 9 வந்ததா இல்லையா...? அதுதான் முக்கியம்!

● ஜி. ஆரோக்கியதாஸ், சென்னை - 15

**? ஜெயலலிதாவுக்குக் கோயில் தொடர்பான விஷயங்களில் மட்டுமே நான் ஆலோசகர் என்கிறாரே ஜயேந்திரர்?**

! சிவ சிவா!

● லெ.நா.சிவகுமார், சென்னை - 33

**? தென்பழனி முருகனுக்குக் கவசம் அணிவிப்பது பற்றி...?**

! நவபாஷாண மூலவருக்கு அர்ச்சனை; உலோகத்தாலான உற்சவருக்கு அபிஷேகம் என்று ஒரு மரபை உருவாக்கிவிட்டால் பிரச்னை தீர்ந்துபோகும். இதையும் அரசு தன்னிச்சையாகச் செய்யாமல் மதத் தலைவர்களைக் கலந்தாலோசித்துச் செய்தால் மக்களால் எளிதாக ஏற்கப்படும்.

● ஆர். கோபாலன், மதுரை *

**? சீனா வழி காட்டுவதுபோல் இந்தியாவிலும் 'பெரிசுகள்' அரசியல் - அதிகாரங்களிலிருந்து ஓய்வு பெற்று இளசுகளுக்கு வழிவிட்டால் என்ன...?**

! கம்யூனிஸ்ட் சீனாவையும் ஜனநாயக இந்தியாவையும் ஒப்பிட முடியாதுங்க. இங்கே எல்லாம் வாக்காளர்களின் விருப்பப்படி தாங்க. அங்கேயும் கிழடுகள் ஆட்சியில் இருந்திருக்காங்க; இங்கேயும் இளைஞர்கள் பிரதமர் பதவிக்கு வந் திருக்காங்க.


* வேண்டாத வேலை


* பொது நோக்குப் புரளி!

● எம். ராஜேந்திரன், லால்குடி

**? எனது சொந்த கோரிக்கை எதுவும் வைக்க மாட்டேன். மக்களுக்காக ஒரு சின்ன கோரிக்கை உள்ளது; அதைத் தூதராக வருபவரிடம் சொல்வேன் என்கிறானே வீரப்பன்?**

! அடாடா! எத்தனை பெரு நோக்கு. அதனால்தான் ஒரு தனிமனிதரைப் பிடித்துக் கொண்டு போய் வைத்துக் கொண்டு படாத பாடு படுத்திக் கொண்டிருக்கிறாராக்கும்!

● சித்ரா கிருஷ்ணமூர்த்தி, கும்பகோணம்

**? கட்டப்பஞ்சாயத்து நடைமுறைக்கு வருவதற்கு அடிப்படைக் காரணம் என்ன?**

! ரௌடியிசத்தால் வளர்ந்து, ரௌடியிசத்தை அனுமதித்து, ரௌடியிசத்தை வளர்க்கும் அரசியல்தான்.

* ரூ.50 பரிசு பெறுபவர் :
**ஆர். கோபாலன்,**
எஃப் 80, சாந்தி சதன்,
கோச்சடை,
மதுரை - 625 016.

"நீங்கள் சொன்னதால்தான் பொன்னையனுக்கு வோட்டுப் போட்டோம். ஆனால் அவர் சொன்ன வாக்குறுதியைக் காப்பாற்றவில்லை. எனவே உங்களுக்கு சவுக்கடி தண்டனை" என்று விவசாயச் சங்க பிரமுகர்களான தெய்வசிகாமணிக்கும், ராமசாமி கவுண்டருக்கும் தண்டனை கொடுத்திருக்கிறார்கள் திருச்செங்கோடு பகுதி விவசாயிகள். அவர்களுக்குக் கொடுத்த வாக்குறுதி மட்டும்தான் நிறைவேற்றப்பட வில்லையா? தொகுதியை வலம் வந்தோம். பொன்னையன் மீதான குற்றச்சாட்டுகளும் அவரது பதில்களும் இதோ...

திருச்செங்கோடு தொகுதியின் முதுகெலும்பாக விளங்கும் தொழில்கள், விவசாயம், விசைத்தறி, ஆழ்குழாய் கிணறு, லாரிகள். யார் கையையும் எதிர்பாராத மக்கள் – குழந்தையிலிருந்து பெரியவர்கள் வரை – உழைப்பில் ஈடுபடுகிறார்கள். "தேர்தல் வரும்போது வோட்டுப் போடறதோட சரிங்க... நம்ம வேலைதாங்க முக்கியம்" என்கிறார் விசைத்தறி கணேச முதலியார். மூன்றரை லட்சம் வாக்காளர்கள். 183 கிராமங்கள். "1996 - 2001ல் தி.மு.க ஆட்சியில் நிறைவாகவே பணிகள் நடந்தன" என்று கட்சி சார்பில்லாத மக்கள் கூடச் சொல்கிறார்கள். அப்போது எம்.எல்.ஏ வாக இருந்தவர் டி.பி. ஆறுமுகம். தொகுதியில் இவருக்கு நல்ல பெயர் இருக்கிறது. இருந்தும் சென்ற சட்டமன்றத் தேர்தலில் பொன்னையனிடம் தோல்வியடைந்தார்.



"தொகுதியில் கட்டப் பஞ்சாயத்தை அறவே ஒழித்துவிட்டேன். அதன் காரணமாக பலருக்கு என் மேல் ஆத்திரம் இருக்கலாம்"

# "சவுக்கடிக்கு

"குடிநீர் வடிநீர் வாரியத்திடம் 90 கோடி பெற்று, கிராமங்களெங்கும் மேல்நிலைத் தொட்டிகள் கட்டி, குடிநீர்த் திட்டம் கொண்டு வந்தோம். கான்கிரீட் சாலைகள், சோடியம் விளக்குகள் என்று பல பணிகளை நடத்தி முடித்தேன். காவிரிக்குக் குறுக்கே கொக்கராயன்பேட்டை – லக்காபுரம் பாலம் கட்டும் வேலைக்கு எங்கள் ஆட்சியில் சர்வே நடத்தினோம். தொடர்ந்து அதைச் செய்து முடிக்காமல் கிடப்பில் போட்டு விட்டார்கள்" என்கிறார் டி.பி. ஆறுமுகம்.

**பொன்னையன்:** தவறான தகவல். பல காரியங்களுக்கு சர்வே நடக்கும். ஆனால் முடிவில் பல்வேறு விதங்களில் அதன் பயன்பாடு, சாத்தியத்தன்மை பொறுத்துத்தான் திட்டங்கள் எடுத்துக் கொள்ளப்படும். இந்தப் பாலத்திற்கு ஆகும் செலவை ஒப்பிடும்போது, அந்த அளவுக்கு, போக்குவரத்து

இருக்காது என்பதால் திட்டம் கைவிடப் பட்டது. ஆனால் கொக்கராயன் பேட்டை-பள்ளிப்பாளையம் இடையில் மற்றொரு பாலம் அமைத்தால், ஏற்கெனவே இருக்கும் பாலத்தில் நெரிசல் குறையும் என்ற நோக்கில் ஓர் ஆய்வு நடந்து வருகிறது.

"பல சட்டமன்ற உறுப்பினர்கள் தொகுதி நிதியில் ஏராளமான நலத்திட்டங்


• செங்குட்டை பாளையம் மாரியம்மன் கோயில்

பள்ளிக் கட்டடங்கள், சிறு பாலங்கள் ஆகியவையும் கட்டப்பட்டு வருகின்றன. 75000 ரூபாய்தான் மீதியிருக்கிறது.

"தேர்தல் சமயத்தில் விசைத்தறி தொழில் நசிந்து போவதைப் பற்றி முதலைக் கண்ணீர் வடித்துப் பேசிய பொன்னையன்,



# நான் பொறுப்பல்ல...!"

களை நிறைவேற்றிவரும் நிலையில், பொன்னையன், தொகுதி நிதியில் என்ன செய்திருக்கிறார் என்றே தெரியவில்லை" என்று குற்றம் சாட்டுகிறார் வலது கம்யூனிஸ்ட் மாணவர் பிரிவு செயலரான தங்கமணி.

**பொன்னையன்:** சென்ற ஆண்டு எனது தொகுதி நிதியான 82 லட்சம் முழுவதும் வளர்ச்சிப் பணிகளுக்குச் செலவிடப்பட்டு, பயன்கள் அனுபவிக்கப்பட்டு வருகின்றன. இந்த வருடம் மகளிர் கழிப்பறைகள், நிர்வாக அலுவலகக் கட்டடங்கள், மாணவர் விடுதிகள், குடிநீர் திட்டங்கள் என்று பல வேலைகள் நடந்து வருகின்றன. 32 லட்சம் செலவில்

இன்று அந்தத் தொழில் அபிவிருத்தி அடைய எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை. மூன்று ஷிப்ட் ஓடிக் கொண்டிருந்த தறிகள் இன்று ஒரு ஷிப்ட் ஓடுவதே பெரும்பாடாக இருக்கிறது" என்று சொல்கிறார். திருச்செங்கோடு நகராட்சி உறுப்பினரான முரசொலி முத்து.

**பொன்னையன்:** நூல் விலை அதிகமானதால் துணி விலையும் அதிகமாகிவிட்டது. மேலும் உலக வர்த்தக நிறுவன ஒப்பந்தப்படி, வெளிநாடுகளிலிருந்து துணிகள் இறக்குமதி செய்யப்படுகின்றன. எனவே, நமது நாட்டுத் துணி விற்பனையில் தேக்கம் ஏற்பட்டிருக்கிறது. இந்த நிலையில் மைய அரசு உற்பத்தி

அமைச்சர் பொன்னையன்

வரியையும் உயர்த்திவிட்டது. இருந்தாலும் மாநில அளவில் நெசவாளர்களின் பிரச்னை களைத் தீர்க்க நடவடிக்கை எடுக்கப்பட்டி ருக்கிறது. கூட்டுறவு சங்கங்களின் மூலம் நூல் விநியோகம், மின்கட்டண டெபாஸிட் குறைப்பு ஆகியவற்றைச் செய்திருக்கிறோம். பெரிய துணி ஆலைகளுக்கு மைய அரசு சலுகைகள் தந்து, விசைத்தறிகளுக்கு வரி போட்டுள்ளதால்தான் தமிழகத்தில் பெரிய பாதிப்பு ஏற்பட்டிருக்கிறது.

"திருச்செங்கோடு நகராட்சி தி.மு.க வசம் இருப்பதால், பல திட்டங்களுக்கு அரசி டமிருந்து நிதி வருவது நின்று போயிருக்கிறது. ஊழியர்களுக்குச் சம்பளம், மின்கட்டணம் ஆகியவற்றுக்குக் கூட, நிதி கொடுக்க அரசு தாமதம் செய்கிறது. இதனால் பணிகள் பெரிதும் பாதிக்கப்படுகின்றன" என்றார் முத்து.

**பொன்னையன்**: மைய அரசு, தமிழகத் துக்கு பத்தாவது நிதிக் குழுவின் பரிந்துரை யின்படி ஒப்புக் கொண்ட நிதியில் முதற் கட்டமாகக் கொடுக்க வேண்டிய நிதியில் 1130 கோடியைக் குறைத்துவிட்டார்கள். காரணம், தமிழகம் முன்னேறிய மாநிலமாம். மைய அரசு தாராளமாக நிதி ஒதுக்கினால்தான் உள் ளாட்சிகளுக்கு நிதி கொடுக்க முடியும் என்று முதல்வர் போராடி வருகிறார். மத்தியிலிருந்து நிதி வந்தால் உடனே கொடுக்கப்படும். இதில் அரசியல் காழ்ப்புணர்ச்சி இல்லை. மேலும் நகராட்சிகள் சுயமாக நிதியைத் தேட வேண் டும். ஆனால் மக்கள் ஆதரவை இழக்க வேண் டுமே என்ற கவலையில் நிதி பெருக்கும் யோச னைகளைப் பரிசிலிக்க தயங்குகிறார்கள்.

கொக்கராயன்பேட்டையைச் சேர்ந்த கரும்பு விவசாயிகள் சங்கத் தலைவர் முத்து கணபதி "கரும்பு லாரிகள் அதிகம் செல்வ தால் கொக்கராயன்பேட்டை - பள்ளிப் பாளையம் சாலை மிகவும் பாதிப்பு அடைந் திருக்கிறது என்றும், அதிலும் குறிப்பாக, கோம்புவில் உள்ள தரைப்பாலத்தை உயர்த் தித் தர அமைச்சர் உறுதிமொழி அளித்தா கவும் சொல்கிறார்.

**பொன்னையன்**: நான் அதுபோல எதுவும் சொல்லவில்லை. ஆனால் மொலசியிலிருந்து கொக்கராயன்பெட் - வழியாக பள்ளிப்பாளை யம் செல்லும் சாலை புதுப்பிக்கப்பட விருக்கிறது.

"எந்தெந்தப் பகுதியில், எந்தத் துறை யினர் அல்லது சமூகத்தினர் அதிகமாக வசிக்கிறார்களோ, அதற்கேற்றபடி பேசி வாக் குறுதிகளை அள்ளி வீசி வோட்டு கேட்டார் பொன்னையன். "குறிப்பாக நாடார்கள் அதிக மாக வாழும் இடங்களில் "கள் இறக்க அனு மதி கொடுக்கப்படும்" என்றும் பேசியிருக் கிறார். இது தவிர விவசாயிகளுக்கு உயர்ரக ஆடுகள் இலவசமாக வழங்கப்படும், என்றும் விசைத்தறி தொழிலாளர்களுக்கு அறுபது வயதுக்கு மேல் ஓய்வூதியம் வழங்கப்படும் என்றும், தொகுதியில் விவசாய ஆராய்ச்சி மையம் அமைக்கப்படும் என்றும் கூடச் சொல்லியிருக்கிறார். இந்த வாக்குறுதிகளின் கதி என்ன?" என்று தொகுதி மக்கள் கேட் கிறார்கள் என்கிறார் மாவட்ட வலது கம்யூனிஸ்ட் செயலாளரான மணிவேல்.

**பொன்னையன்**: விசைத்தறியாளர்களுக்கு ஓய்வூதியம் பற்றி நான் எதுவும் பேசவில்லை. கள் இறக்குவது என்பது இப்போது சட்ட


• மணிவேல்


• தங்கமணி

விரோதமான செயல். அதுபற்றி நான் எப்படி வாக்குறுதி கொடுக்க முடியும்? மாறாக நான் சொன்னது என்னவென்றால் பனை மரத்திலிருந்து பதநீர் இறக்கி, அதிலிருந்து பனங்கற்கண்டு போன்ற பனைப் பொருட்கள் உற்பத்தி செய்து ஏற்று மதி செய்ய நடவடிக்கை எடுக்கப்படும் என்று தான். இது தவிர, ஆஸ்திரேலிய நாட்டு உயர் ரக ஆடுகள் மூலம் விவசாயிகளின் வருமானத் தைப் பெருக்க முடியும். தற்சமயம் சுய வேலை வாய்ப்புத் திட்டத்தின் மூலமும், வங்கிகள் மூலமும் ஆடுகள் வளர்க்க விவ சாயிகளுக்கு நிதியுதவி செய்யப்படுகிறது. இலவசமாக ஆடு கொடுப்போம் என்று சொல்லவில்லை. எங்கள் கட்சியின் தேர்தல் அறிக்கையில் சொல்லியிருந்தபடி எம்.எஸ். சுவாமிநாதன் அறக்கட்டளை உதவியுடன், மாவட்ட அளவில் விவசாய உற்பத்தித் திறனை அதிகரிக்கவும், லாபம் தரும் பயிர் வகைகள், விற்பனை யுக்தி போன்றவை பற்றி யும் ஆராய்ச்சி செய்து, விவசாயிகளுக்கு

ஆலோசனை சொல்லவும் விவசாய ஆராய்ச்சி மையங்கள் அமைக்கப்பட்டு வருகின்றன. நாமக்கல் மாவட்டத்திலும் இது அமைக்கப்படும்.

"பொன்னையனுக்கு வோட்டு போடச் சொன்னீங்க... ஆனால் இப்போது மேட்டூர் இடது வாய்க்காலில் வாக்களித்தபடி தண்ணீர் விடவில்லை. விவசாயம் பாதிக்கப்பட்டிருக்கிறது. எனவே நீங்கள் சவுக்கடி தண்டனையை வாங்கிக் கொள்ளுங்கள்" என்று கொங்கு விவசாய சங்கப் பிரமுகர்களான தெய்வசிகாமணியையும், ராமசாமி கவுண்டரையும் விவசாயிகள் செங்குட்டைபாளையம், மாரியம்மன் கோயிலில் வைத்து மடக்கியபோது "நாங்கள் செய்தது தவறுதான், தண்டனையை ஏற்றுக் கொள்கிறோம்" என்றார்கள் அவர்கள். "சவுக்கடி என்றால் நீங்கள் நினைப்பது போலல்ல. ஒரு எதிர்ப்பை வெளிப்படுத்தும் ஸிம்பாலிக் செயல். இந்தப் பகுதிகளில் உள்ள மாரியம்மன் கோயில்களில் திருவிழாவின் போது சில சடங்குகளை நிறைவேற்ற, சவுக்கு பயன்படுத்தப்படும். சென்ற வருடம் மேட்டூரில் 39 அடியாக இருக்கும் போதே தண்ணீர் திறந்து விட்டார்கள். ஆனால் இந்த வருடம் திறக்கப்படவில்லை. மற்ற தொழில்கள் நசிந்துவிட, விவசாயமும் பாதிக்கப்பட்டால் மக்கள் என்ன செய்வார்கள்" என்று கேட்கிறார் தெய்வசிகாமணி.



• முரசொலி முத்து


• தெய்வசிகாமணி


• ஆறுமுகம்

**பொன்னையன்:** மேட்டூருக்குத் தண்ணீர் வராததற்குக் காரணம், கர்நாடக முதல்வர் கிருஷ்ணாதான். காவிரி ஆணையம், நதிநீர் ஆணையம், சுப்ரீம் கோர்ட் என்று எந்த அமைப்பையும் மதிக்காமல், சட்ட விரோதமாகச் செயல்பட்டவர் கிருஷ்ணா. அவர்தான் தண்டிக்கப்பட வேண்டியவரே தவிர, காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த பள்ளிப்பாளையம் விவசாயிகள் அல்ல என்பதை அங்குள்ள உண்மையான விவசாயிகள் உணர்ந்திருக்கிறார்கள்.

"விவசாயிகளின் பிரச்னையை வெளிக் கொண்டு வந்த காரணத்தால் எங்களை கள்ளச்சாராய பேர்வழிகள் என்றும் குற்றம் சாட்டியிருக்கிறார் அமைச்சர். அதற்காக அவர் மீது வழக்கு போடப் போகிறேன்" என்கிறார் தெய்வசிகாமணி.

**பொன்னையன்:** அவர் வழக்கு போடப் போவதாகச் சொல்வதால் நீதிமன்றத்தில் 'என்ன பேசினேன்' என்று நான் சொல்லுவேன்.

"திருச்செங்கோட்டில் தொகுதி எம்.எல்.ஏவுக்கு என்று ஓர் அலுவலகம் கூட இல்லை. நாங்கள் எங்கு சென்று குறைகளைச் சொல்வது?" என்ற நாம் சந்தித்த பொதுமக்கள் புகார் கூறினார்கள்.

**பொன்னையன்:** வேலைப்பளு இல்லாத பட்சத்தில் சனி, ஞாயிறு இரண்டு நாட்களும் தொகுதியில்தான் இருக்கிறேன். அரசினர் விடுதியில் தங்கி மனுக்களை வாங்குகிறேன். நான் மனு வாங்கும்போது அனைத்துத் துறையினரும் என்னோடு இருக்கிறார்கள். இதனால் உடனுக்குடன் தீர்வு கிடைக்கிறது. மேலும் புகார்களைத் தொடர்ந்து கண்காணித்து நிவர்த்தி செய்ய, ஆர்.டி.ஓ தலைமையில் ஒரு குழு இருக்கிறது. எம்.எல்.ஏ அலுவலக அறை கட்டப்பட்டு வருகிறது. மனுக்கள் பெறும் பொறுப்பை, கட்சிக்காரர்களிடம் விடுவதில்லை.

வெற்றி பெற்ற பின் சில மாதங்கள், அமைச்சரின் தம்பியான ராமு என்பவர் திருச்செங்கோட்டில் மக்களின் மனுக்களைப் பெற்று வந்தாராம். ஆனால் அவர் மீது கட்சித் தலைமைக்குப் புகார்கள் போனதால் அவர் விலகி விட்டாராம். ஆனால் இது பற்றியெல்லாம் பேச அமைச்சர் பொன்னையன் விருப்பப்படவில்லை.

"தொகுதியில் கட்டப் பஞ்சாயத்தை அறவே ஒழித்துவிட்டேன். அதன் காரணமாக பலருக்கு என் மேல் ஆத்திரம் இருக்கலாம்" என்று மட்டும் சொல்கிறார்.

— ப்ரியன்

படங்கள் : ராஜன்

தயாராகிறார்கள்



• நித்யஸ்ரீ



# எல்லாமே புதுசு!

*டிசம்பர் மியூசிக் சீஸனை வரவேற்க ரசிகர்கள் காத்திருக்க, இசைக் கலைஞர்கள் அவர்களைத் திருப்தி செய்ய எப்படித் தயாராகிறார்கள்?*

**சுதா ரகுநாதன் :**

“என் குரு எம்.எஸ்.வி. அம்மாவோட பழைய பாட்டுகள் உள்ள கேசட்டுகள் என்னிடம் இருக்கு. அவற்றை எல்லாம் மறுபடி போட்டுக் கேட்டுக் கொண்டிருக்கிறேன். நான் பாடாத பல பாட்டுகள் அதிலே நிறைய இருக்கு. சில கீர்த்தனைகளை, சில காலம் பாடியிருப்போம். அதை எல்லாம் மறுபடி 'ரிவைவ்' பண்ணுகிற மாதிரி பாடலாம்னு இருக்கேன். கற்றுக் கொண்ட பிறகும் நான் பாடாத கீர்த்தனைகளே நூறுக்கு மேல இருக்கு. அதை எல்லாம் பாடலாம்னு முடிவு பண்ணியிருக்கேன்.




இந்த சீஸனுக்கு என்று சில புதுப் புடைவைகள் வாங்கியிருக்கேன். லைட் – வயலெட், ஆஃப் வயலெட், ஆரஞ்சு, அப்புறம் ஸீ – க்ரீன் – இந்த மாதிரி கலர்ல வாங்கியிருக்கேன்.

நகைகள் கூட புதுசாக வாங்கியிருக்கேன்... தனிஷ்க் நிறுவனத்தின் மாஸ்டர்பீஸ் என்று இரண்டு டிசைன்கள் வந்திருக்கு. கிட்டத்தட்ட நெக்லெஸ் மாதிரி கழுத்தோடு ஒட்டியிருக்கும். 'சோக்கர்'னு சொல்லுவாங்க. புதுப் பொலிவு மிக்க கச்சேரியை நான் செய்ய எங்கக் குடும்பமே தயாராயிட்டிருக்கு.

**நித்யஸ்ரீ மகாதேவன்:**

புதுக் கீர்த்தனைகள் தயார் பண்ணிட்டிருக்கேன். ராகம் – தானம் – பல்லவியும் தயார் பண்ணணும். என்னோட ரசிகர்கள் நிச்சயமா ரசிச்சுப் பாராட்டற மாதிரி இருக்கும்.

புதுப் புடைவைகள்... மெரூன், ஆரஞ்ச் போன்ற பிரைட் கலர்ஸ்தான் எப்பவும் என்னோட சாய்ஸ். தாமரை பிங்க், மயில் கழுத்து நீலம்னு புடைவைகள் வாங்கியிருக்கேன். அம்மா வாங்கிக் கொடுத்தது மெரூன் கலர் புடைவை!

ஜுவல்லரி...? கணவர் செலக்ஷன்தான் எப்பவும். என் மாமியார் செலக்ட் பண்ணுவதும் உண்டு. கேரளா டைப் 'முல்லை மாலை' வாங்கியிருக்கேன். இந்த சீஸன்ல அதைப் போட்டுக்கலாம்னு இருக்கேன்.

இசைக் குடும்பங்களும், ரசிகர்களும் சேர்ந்து கொண்டாடுகிற விழாதான் டிசம்பர் மியூசிக் சீஸன். அதனால எங்களைப் போலவே, ரசிகர்களும் இதை வரவேற்க ஆவலாக இருப்பாங்கன்னுதான் நான் நம்பறேன்.

— எஸ்.வி.என்.

## மும்பை மசாலா

# தம்பூராவுக்குச் சால்வை!

'பி'ல் கேட்ஸுக்கு 'கரிஸ்மா' இல்லையாம்; அவர் ஹாண்ட்ஸமாக இல்லையாம்; பேசவும் தெரியவில்லையாம்; 'டிரெஸ் ஸென்ஸும்' இல்லையாம்; 'விண்டோஸை' விற்க வந்த சேல்ஸ்மேன் போல் பேசுகிறாராம். அதை நைஸாக நம் தலையில் கட்டிவிட்டாராம்' - இப்படி எல்லாம் இங்குள்ள அறிவு ஜீவிகள் சொல்கிறார்கள். சொல்லி விட்டுப் போகட்டுமே! எய்ட்ஸுக்காக, கோடி கோடியாகக் கொட்டிக் கொடுக்கும் பொன் மனம் அவரிடம் இருக்கிறதே? நம்மவர்களிடம் இருக்கிறதா? மிஞ்சிப் போனால், பூஜ்பல் போல் இஸ்லாமியக் குல்லா போட்டுக்கொண்டு 'இஃப்தார்' பார்ட்டிகளுக்குச் சென்று அவர்களுடன் 'போஸ்' கொடுப்பார்கள். அல்லது முண்டேவைப் போல் 'சங்கர்ஷ் யாத்திரை' கிளம்பி, வி.எச்.பி ஸ்டைலில் கலக்குவார்கள். தேவையானால் ஷேகர் சுமன் 'டாக் ஷோ'வுக்காக 'ஜிங்குசக்கான்' டான்ஸ் கூட ஆடுவார்கள்... தானம் கிடைத்த ஸ்விஸ் பசுவுக்கு ஒரு பல் சொத்தை என்னும் வாய்ச்சொல் வீரர்கள்... இனியாவது உள்ளத்திலிருந்து பேசட்டும்...

• இஃப்தார் விருந்து

• ஆன்மீக மருந்து

உள்ளத்திலிருந்து பேசும்போது பொங்கும் உவகையிருக்கிறதே, அதைக் கண்டு களிக்க, நீங்கள் 'பாந்த்ரா - குர்லா காம்ப்ளக்ஸுக்கு வந்திருக்க வேண்டும். அங்கு ஸ்ரீஸ்ரீ ரவிசங்கர்ஜியுடன் சுதர்சன க்ரியா செய்வதற்கும், சத்சங்கத்தில் பங்கு கொள்வதற்கும், கூடியிருந்த லட்சக்கணக்கான மக்கள் மனங்களில் உவகை ஊற்று பொங்கிப் பிரவாகித்தது. "நீங்கள் தெய்வமா?" என்ற கேள்விக்கு "அதில் சந்தேகமென்ன?" என்ற குருஜியின் பதிலில் திகைத்த கூட்டம், 'நான், நீங்கள் எல்லோருமே தெய்வங்கள்தாம்; நம் உள்ளத்தில் இறைவனல்லவா வீற்றிருக்கிறான். சந்தேகமென்ன?" என்றதும் பரவசப் பட்டது. இத்தனை கூட்டத்தையும் அழகாகச் சமாளித்த 'ஆர்ட் ஆஃப் லிவிங்'காரர்களை மெச்சத்தான் வேண்டும்!

மெச்சத்தான் வேண்டும் 'பாண்டுரங் ஃபைன் ஆர்ட்ஸ்'காரர்களை! இசை, வாத்தியக் கலைஞர்களை, அவர்கள் வருடா வருடம் கௌரவிப்பது பெரிய விஷயமில்லை. ஆனால் இம்முறை, திரு வெங்கடேஸ்வரன் தலைமையில் நடந்த விழாவில், இருபத்தைந்து வருடங்களாகத் தம்பூரா வாசித்துக் கொண்டிருக்கும் லக்ஷ்மி கிருஷ்ணமூர்த்தி என்ற பெண்மணிக்கு 'சங்கீத சேவா மணி' பட்டமளித்து கௌரவித்ததுதான் அதிசயம். ஒரு தம்பூரா கலைஞரை முதன் முதலாக கௌரவித்த பெருமை, பாண்டுரங் ஃபைன் ஆர்ட்ஸுக்குத்தான்!

• ஜெயஸ்ரீ ராஜ்



**மேஷம் :** செவ்வாய் ஏழில் ஆட்சிபெற்ற சுக்ரனுடன் உங்கள் கிரக சஞ்சாரம் இருப்பதால் உற்சாகமான மனநிலையில் இருப்பீங்க. தெய்வ பலம் உண்டு. எடுத்த காரியத்தில் வெற்றி நிச்சயம். சனி மூன்றாம் இடத்தில் இருப்பதால் எதிர்ப்புகள் மாயமாகிடும். சுயமாகத் தொழில் பண்றவங்களுக்கு ஆதாயம் உண்டு. கொடுக்கல் வாங்கல் சமயத்துல கை கொடுக்கும். சினிமா, ஓவியம் போன்ற கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. புதிய ஒப்பந்தம் தேடி வரும். குடும்பத்தில் சுபகாரியச் செலவுகள் ஏற்படும். மகிழ்ச்சி, ஒற்றுமைக்குப் பஞ்சமில்லை. சிலர் புதிய சொத்துக்கள் வாங்க வாய்ப்பிருக்கு.



**ரிஷபம் :** மனசுல இதுவரை இருந்து வந்த குழப்பம் மறைந்து போகும். பொருளாதாரத்துல அபிவிருத்தி உண்டு. சுப காரியத்துக்காக வெளியூர் செல்ல வேண்டி வரலாம். அலுவலகத்துல சுமுகமான நிலை நிலவும். பொருளாதார வசதி அதிகரிக்கும். வரவேண்டிய தொகை வந்து சேரும். இயந்திரம், ஜவுளி, கெமிக்கல்ஸ், உணவு வகைகள் மருத்துவம் போன்ற துறைகள் ஆதாயம் தரும். குடும்பத்தில் ஒற்றுமை நிலவும். நண்பர்கள் உறவினர்கள் உதவ வருவாங்க. சட்டம், இராணுவம், காவல் போன்ற துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. பெண்களுக்கு உற்சாகமான வாரம் இது.



**மிதுனம் :** இந்த வாரம் எதிர்பாராத லாபம், திடீர் அதிர்ஷ்டம், பொருளாதார அபிவிருத்தி, சரளமான பண வசதி கிடைக்கும். இதுவரை இழுத்தடித்துக் கொண்டிருந்த காரியங்களில் வெற்றி உண்டு. கொடுக்கல் வாங்கல் சுமுகமா இருக்கும். அழகு சாதன அலங்காரப் பொருட்கள், ரியல் எஸ்டேட் ஆகிய தொழில்களில் முன்னேற்றம் ஏற்படும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு புதிய ஒப்பந்தங்கள் தேடி வரும். குடும்பத்தில் திருமணம் போன்ற சுபகாரிய முயற்சிகள் கைகூடும். பெண்களுக்கு அதிர்ஷ்டமான வாரம்.



**கடகம் :** இதுவரை தடைப்பட்டிருந்த காரியங்கள் இப்போது நிறைவேறும். அலுவலகத்தில் உற்சாகம் பெருக்கெடுத்து ஓடும். மேலதிகாரிகளின் பாராட்டு கிடைக்கும். வேலையில்லாதவங்களுக்கு அதுக்கான வாய்ப்பு வரும். பணம் பல வழிகளிருந்து வரும். தொழில் விஷயமாகச் சிலர் வெளியூர் / வெளிநாடு போக வாய்ப்பிருக்கு. வரவேண்டிய பணம் வசூலாகும். குடும்பத்தில் சந்தோஷம் நிலவும். இயந்திரம், எஃகு ரியல் எஸ்டேட், பொன், வெள்ளி ஆபரணங்கள் போன்ற தொழில்களில் ஆதாயம் உண்டு.



**சிம்மம் :** இந்த வாரம் எடுத்த காரியத்தில் வெற்றி உண்டு. உங்கள் திறமை, புத்திசாலித்தனம் வெளிப்படும். உற்சாகமான மனநிலை ஏற்படும். குடும்பத்தில் நண்பர்கள் வருகை, உறவினர்கள் வருகை என்று சந்தோஷம் தாண்டவமாடும். சுபகாரியங்கள் நடக்க சந்தர்ப்பம் வரும். உடன்பிறந்தவர்கள் உதவ முன் வருவாங்க. மக்கள் நலம் சீரா இருக்கும். தொழிலதிபர்கள், வியாபாரிகள் மேன்மையடைவார்கள். பெண்கள் தாங்கள் நினைத்ததைச் சாதிப்பார்கள். புதிய நகை, ஆடைகள் வாங்க வாய்ப்பிருக்கு. சிலர் வீடு கட்டவும் வாங்கவும் யோகம் உண்டு. சட்டம், காவல், ராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவங்க முன்னணிக்கு உயருவாங்க.



**கன்னி :** இந்த வாரம் நீங்க எதிர்பார்க்காத திடீர் பயணத்துக்கு வாய்ப்பிருக்கு. இந்தப் பயணத்தால் ஆதாயம் உண்டு. மனசுல துணிச்சல், தன்னம்பிக்கை அதிகரிக்கும். மறைமுக, நேர்முக எதிர்ப்புகள் மறையும். இதுவரை இருந்து வந்த மந்த நிலை விலகும். போட்டி, பொறாமை, தடைகள் மாயமாகும். வேலையில் மகிழ்ச்சி ஏற்படும். சிலருக்குப் பதவி உயர்வு, புதிய பொறுப்புகள் வந்து சேரும். குடும்பத்தில் மகிழ்ச்சி நிலவும். வெளிநாட்டிலிருந்து சுப செய்தி வந்து சேரும். கலைத் துறையைச் சேர்ந்தவங்க எதிர்பாராத ஆதாயம் காணலாம். பண நடமாட்டம் தாராளமா இருக்கும்.

# நடக்குமென்பார்; நடக்கும்!



இளம் பாடகி மதுமிதா (மேஷம்) உற்சாகமான மனநிலையில் இருப்பாங்களாம்.



**துலாம் :** இந்த வாரம் தேவைக்கேற்ப பணவசதி கிடைக்கும். தெய்வீக மற்றும் புனிதப் பணிகளில் ஈடுபாடு உண்டு. எடுத்த காரியங்கள் சுலபமா முடியும். இதுவரை தாமதமாகிவந்த காரியங்களில் நல்ல திருப்பம் உண்டாகும். சுயமாகத் தொழில் பண்றவங்களுக்கு மேன்மை உண்டு. கொடுக்கல் வாங்கல் சுமூகமா இருக்கும். வரவேண்டிய தொகை வந்து சேரும். குடும்ப ஸ்தானத்தைக் குரு பார்ப்பதால், திருமணம், புதிய வீடு போன்ற சுப காரியங்கள் நடக்க சந்தர்ப்பம் இருக்கு. பூர்வீகச் சொத்து விவகாரத்தில் அனுகூலமான திருப்பம் வரும். கலைத் துறையைச் சேர்ந்தவங்க முன்னணிக்கு உயருவாங்க. பேச்சில் கடுமை, பதற்றம் வேண்டாம்.



**விருச்சிகம் :** இந்த வாரம் நன்மை பாதி தீமை பாதி மாதிரி, உங்களுக்கு டென்ஷன் ஏற்படுத்தும். நெருக்கடிகள், பிரச்னைகளை முற்றி விடாமல் காக்கும். தெய்வ பலம் அதிகரிக்கும். மனசுல தெளிவு பிறக்கும். புதிய வேலை முயற்சிகள் கைகூடும். விஞ்ஞானம், கம்ப்யூட்டர், பர்னிச்சர், பொன், வெள்ளி, முதலிய தொழில்கள் மேன்மையடையும் லாபத்தையும் கொண்டு வரும். குடும்பத்தில் புதிய பொருள் சேர்க்கை நிகழும், திருமணம் ஆகாதவர்களுக்கு அதுக்கான வாய்ப்பு வரும். வெளிநாட்டிலிருந்து எதிர்பார்த்திருந்த நல்ல செய்தி வந்து சேரும்.



**தனுசு :** இந்த வாரம் எடுத்த காரியங்கள் சுலபமாக நிறைவேறும். உற்சாகமான மனநிலை, தெய்வானுக்கிரகம் ஏற்படும். எதிர்ப்புகள் மறையும். பயணத்தால் நன்மை உண்டு. வேலை சம்பந்தமாக வெளியூர் / வெளிநாடு போகும் வாய்ப்பு இருக்கு. கொடுக்கல் வாங்கல் தக்க சமயத்தில் கைகொடுக்கும். வரவேண்டிய பாக்கிப் பணம் இப்போ வசூல் ஆகும். தொழிலதிபர்கள் வளர்ச்சி அடைவாங்க. இரும்பு, இயந்திரவகை, கெமிக்கல்ஸ், மருத்துவம், தோல் பொருட்கள் லாபம் கொண்டு வரும். மறைமுக எதிர்ப்புகள் மறையும். குடும்பத்தில் ஒற்றுமை நிலவும். இதுவரை இருந்து வந்த விரோதம் மாறும். சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவங்களுக்குப் புகழ் பாராட்டு உண்டு.

## நவம்பர் 27 முதல் டிசம்பர் 3 வரை



**மகரம் :** மனசுல துணிவு, தன்னம்பிக்கை ஏற்படும். மறைமுக நேர்முக எதிர்ப்புகள் மறையும். மனத்தில் அமைதி உண்டாகும். பணநடமாட்டம் தாராளமா இருக்கும். உத்தியோகத்தில் மேலதிகாரிகள் பாராட்டு பதவி, உயர்வு, இடமாற்றம் ஆகியவை கிடைக்கும். வெளிநாடு செல்ல முயற்சிப்பவங்களுக்கு அதுக்கான வாய்ப்பு வரும். புதியவர்கள் அறிமுகம் நிகழும். இதன் மூலம் ஆதாயம் உண்டு. கொடுக்கல் வாங்கல், சுமுகமா இருக்கும். குடும்பத்தில் இதுவரை இருந்து வந்த விரோத மனப்பான்மை விலகும். தாமதமாகிவந்த சுபகாரிய முயற்சிகள், இப்போ நிறைவேற வாய்ப்பிருக்கு. பெண்களுக்கு உற்சாகமான வாரம்.



**கும்பம் :** உங்கள் ராசிநாதன் பூர்வ புண்ணிய ஸ்தானமாகிய ஐந்தாமிடத்தில் வக்ரகதியில் சஞ்சாரம் என்பதால், தெய்வ பலம், தெய்வீக ஈடுபாடு ஏற்படும். கோர்ட், வழக்கு விவகாரங்களில் வெற்றி உண்டு. உடல் ஆரோக்கியத்தில் மேன்மை உண்டு. பணவசதி சரளமா கிடைக்கும். அலுவலகத்தில் எதிர்ப்புகள் விலகும். மேலதிகாரிகளின் பாராட்டுக் கிடைக்கும். எல்லாக் காரியங்களிலும் சுதந்திரமாகச் செயல்படும் சூழ்நிலை ஏற்படும். இதனால மதிப்பு, செல்வாக்கு உயரும். சுயமா தொழில் பண்றவங்களுக்கு பொருளாதார நிலையில் மேன்மை உண்டு. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்குப் புகழ், பாராட்டு கிடைக்கும்.



**மீனம் :** இந்த வாரம் மனசுல உற்சாகம் கரைபுரளும். அலுவலகத்தில் மேலதிகாரிகள் பாராட்டு, ஆதரவு கிடைக்கும். புதிய வேலை வாய்ப்புகள் தேடி வரும். இதுவரை இருந்து வந்த போட்டி, பொறாமைகள் மறையும். பணவசதி தாராளமா இருக்கும். பார்ட்னர்ஷிப்ல தொழில் பண்றவங்க எச்சரிக்கையா இருக்கணும். கொடுக்கல் வாங்கல் கைகொடுக்கும். கெமிக்கல்ஸ், மெடிக்கல், ஜவுளி, நகைகள் போன்ற துறைகளில் வியாபாரம் செய்பவர்களுக்கு லாபம் கொட்டும். குடும்பத்தில் மகிழ்ச்சி அதிகரிக்கும். திருமணம் ஆகாதவங்களுக்கு அதுக்கான வாய்ப்பு வரும். பெண்கள் விருந்து, ஊர்னு ஜாலியாக இருப்பாங்க.

## அக்னிசர்மா பக்கம்

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

17

**கா**லத்திலே வந்து உபகாரம் பண்ணு கிறான் பரமாத்மா என்றேன். அவனே சரியான இடத்திலே தோன்றியும் உபகாரம் பண்ணுகிறான். இதை அர்ஜுனனுடைய தேர்த்தட்டிலே பார்க்கலாம். அர்ஜுனனுடைய தேர்த்தட்டிலே அவன் முன்னே இருப்பது அக்ஷரம் அவனுக்கே என்ற பொருளைக் காட்டும். ஜீவன் அவனுக்கே உரியது!

அ என்றாலே லக்ஷ்மியுடன் கூடிய நாராயணன் என்றுதான் அர்த்தம். ஏனென்றால் நாராயணனைச் சொன்னவிடமெல்லாம் லக்ஷ்மியையும் சொல்லியிருக்கிறது. நாராயணன் என்றாலே லக்ஷ்மியோடு சேர்ந்து இருக்கக் கூடியவன் – உ என்றால அவனுக்கே உரியவன் – அவனுக்கே உரியவன் யார்...? அதுதான் ம என்கிற ஜீவாத்மா.

இந்த சுலோகம் – வால்மீகி ராமாயணத்தில் – பிரணவப் பொருளையே காட்டுகிறது.

இப்படி இடத்திலேயும் காலத்திலேயும் முன்னேயிருந்து ரக்ஷிப்பவன் பரமாத்மா ஆனதினாலே, சர்வபலப்ரதத்வம் என்கிற குணம் அவனுக்கு உரியதாயிற்று. சர்வ பலன்களையும் சர்வ ஜீவராசிகளுக்கும் கொடுப்பவன்.

இவர்களுக்குத்தான் கொடுப்பான்; இவர்களுக்குக் கொடுக்கமாட்டான் என்பது கிடையாது.

வாரணம் அழைக்க வந்த நாராணன் அல்லவா அவன்!

ஒரு யானை அழைத்ததற்காக வந்தானே! அது பிராணி என்று ஒதுக்கினானா...?

பசுவாயிருக்கட்டும், பக்ஷியாயிருக்கட்டும்,

அந்த துஷ்ட பிரக்ருதிகளை அழிப்பதற்காக.

அதே மாதிரி தண்டகாரண்ய வனத்திலே அவன் ஓம்கார வடிவத்தில் முந்திக் காணப்படுகிறான். அக்காட்சியைப் பார்த்துவிட்டு வால்மீகி 'அம்மா!' என்றார் 'ஹா!' என்று வியக்கிறார்.

ஏனென்றால், பிரணவத்தை எல்லோரும் உச்சரித்துப் பார்த்திருக்கிறோம். ஆனால் அங்கே தண்டகாரண்யத்திலே பிரணவம் நடந்து போகிறது!

ராமன் முன்னே போகிறான்.

இடையிலே சீதை போகிறாள்

அவர்களைத் தொடர்ந்து லக்ஷ்மணன்.

ஓம்காரத்திலே 'அ' என்ற ஒலி ஸ்ரீ ராமனைக் குறிக்கும் ம – மஹா லக்ஷ்மியைக் குறிக்கும். அந்த திவ்ய தம்பதிக்குக் கைங்கர்யம் பண்ணக்கூடிய பரதந்த்ரனான லக்ஷ்மணன் – அது ஜீவன் – அதாவது பிரணவத்தின் பொருள்.

அப்படியானால் ஓம்காரத்தில் இடம் பெறும் 'உ' என்ற அக்ஷரம்..? 'உ' என்ற

மனிதனாயிருக்கட்டும், தேவதையாயிருக் கட்டும், அவன் திருவடியைப் பணிந்து விட் டால் எப்பேர்ப்பட்ட ஜீவராசிக்கும் பர மாத்மா பலனைக் கொடுக்கிறான்.

இவன் வேண்டியவன் அவன் வேண்டா தவன் என்பதெல்லாம் சர்வபலப்ரதத் வனுக்குக் கிடையாது.

இதற்கும் மேலே சர்வாதாரத்வம் என்கிற குணம். எல்லாவற்றுக்கும் ஆதார மாக பரமாத்மா இருக்கிறான். எல்லாவற் றையும் தாங்குகிறான். சமஸ்தத்துக்கும் ஆதார பூதனாக இருக்கிறான்.

இதைக் கூர்மாவதாரத்திலே நன்கு காட்டினான் நமக்கு. அதனால்தான் வேதம் அவன் ஆதார புருஷன் என்பதை கூர்ம சப்தத்தினாலே காட்டித் தருகிறது.

கூர்மாவதாரம் எதற்குப் பண்ணினான்?

அமிர்தமதன காலத்திலே தேவதை களெல்லாம் அவனைத் தேடிப் போனார்கள்.

எப்படிப்பட்டவர்கள் இந்த தேவர்கள் — தேவதைகள்? அத்தனை பேரும் ஏகப்பட்ட சப்தங்களால் வேதங்களிலே புகழப்படுபவர் கள். துர்வாசர் சாபத்தால் திருப்பாற் கடலில் விழுந்து செய்வதறியாமல் விழிக்கிறார்கள். பேதைமை வந்து அவர்களைச் சூழ்ந்து கொள்கிறது.

ஐச்வர்யம் போய்விட்டதானால் எல்லாம் போய்விடும் என்கிறார்கள். பத்தினி சர்ப்பம் மாதிரி சீறுவாளாம்; புத்திரன் விரோதியாகப் போய்விடுவானாம்; பந்து ஜனங்களெல்லாம் அவர் வருகிறபோதே வேறு பக்கமாகப் போய்விடுவார்களாம் — எதிரே போனால் கஷ்டம் என்று!

ஆகவே ஐச்வர்யம் போனதனால் இந்த தேவர்களுக்கு பிரமை ஏற்பட்டுப் போய்விட் டது.

அப்போது பரமாத்மா உபாயம் சொன் னான். மந்திர மலையைக் கொண்டு வந்து மத்தாகப் போட்டுக் கடையவேண்டும் என்று சொன்னான்.

உடனே கிடுகிடுவென்று முப்பது முக் கோடி தேவர்களும் போய் மந்திர மலை யைத் தூக்குகிறார்கள், தூக்குகிறார்கள்... தூக் கவே முடியவில்லை! மறுபடியும் பகவானி டம் வருகிறார்கள்.

இந்த மாதிரி சமயத்திலேதான் சாதுர்ய மாக இருக்க வேண்டும். நமக்குக் காரியம் ஆக வேண்டும் என்றால் விரோதிகளையும் நம் பக்கத்திலே சேர்த்துக் கொள்ள வேண் டும். அதுதான் உத்தமனுக்கு அடையாளம். அப்போது விரோதத்தைப் பாராட்டக் கூடாது.

"நீங்கள் முப்பத்து மூன்று கோடி என்றால் அசுரர்கள் 66 கோடி. (எப்பொழுதும் நல்லது குறைவு; கெட்டது தான் அதிகம் உலகில்!) நீங்கள் இரண்டு பேரும் சேர்ந்தால் 99 கோடி! அவர்களையும் சேர்த்துக் கொண்டு தூக்குங்கள் மந்தர மலையை'' என்று பரமாத்மா சொன்னான்.

உடனே அசுரர்களிடம் தேவர்கள் போய்க் கேட்டார்கள். அவர்களுக்கும் அமிர் தத்தைத் தருகிறேன் என்று சொல்லி விட்டு அழைத்தார்கள். 99 கோடி பேரும் வந்தார் கள் மந்தர மலையைப் பெயர்த்தெடுக்க!

இந்த இந்திராதி தேவர்களுக்குப் புத்தி எவ்வளவு தூரம் மழுங்கிப் போய்விட்டது என்று இதிலேயிருந்து நீங்கள் தெரிந்து கொள்ளலாம்!

இவ்வளவு பளுவானது. 99 கோடி பேர் தூக்கிக் கொண்டு வருகிறோம். இந்தப் பளு வைக் கொண்டு போய் க்ஷீராப்தியிலே போட்டால், அது உள்ளுக்குள்ளே போய் விடுமோ என்கிற ஞானமே இல்லாமல், கொண்டு போய் ஒரு சமுத்திரத்திலே போட் டுத் தள்ளிவிட்டார்கள். அது உள்ளே போய்விட்டது!

மறுபடியும் பகவானைப் பிரார்த்தித் தார்கள்! அந்த எம்பெருமான் கூர்மமாக, ஆமையாக வடிவெடுத்துக் கீழே போய் பர் வதத்தைத் தூக்கி மேலே கொண்டு வந்தான். வாசுகியைக் கயிறாகப் போட்டார்கள். இனி கடைய வேண்டும்.

இப்போது தெப்போத்ஸவம் நடக்கிறது! சமுத்திரத்திலே தெப்போத்ஸவம்! ஏனென் றால் வாசுகியைப் போட்டு இந்தப் பக்கம் முப்பது முக்கோடி தேவர்கள், அந்த பக்கம் 66 கோடி அசுரர்கள் இழுக்கிறார்கள். இழுத் தால், இந்தப் பக்கம் வருகிறது; அந்தப் பக்கம்



சர்வாதாரன் அவன் என்பதை மகான்களெல்லாம் கண்டார்கள். ஆகையினால் மந்தர மலையைக் கொண்டு பாற்கடலைக் கடைந்ததற்கு தேவ சக்தியோ, அசுர சக்தியோ, பர்வத சக்தியோ, சர்ப்ப சக்தியோ காரணம் அல்ல. தாங்குபவன் பரமாத்மா என்பதை ஸ்பஷ்டமாகக் காட்டியதனாலேதான் **சர்வாதாரத்வேன பரமாத்மத்வம்.** எம்பெருமானிடத்திலே சர்வாதாரத்வம் என்கிற குணம்.

நகர்ந்து போகிறது. நிலையில்லாமல் மத்து தடுமாறுகிறது. மேலே பிடித்துக் கொள்ள வேண்டும் அல்லவா! பிடித்துக் கொண்டால் தான் மத்து சுழலும்!

அப்போதும் பரமாத்மாவைத்தான் பிரார்த்தனை பண்ணினார்கள். கீழே தாங்குகிற எம்பெருமான் மேலேயும் கையைக் கொடுத்து மேல் பகுதியையும் அப்படியே பிடித்துக் கொண்டான். அப்போது இவர்கள் கடைகிறார்கள். வேகமாகக் கடைகிற போதுதானே அமுது மேலெழுந்து வரும். இவர்கள் கடைவதை பகவான் பார்த்தான். 'ஊஹூம் இது பிரயோஜனமில்லை' என்று முடிவுக்கு வந்து, தானே கடைந்தான். எம்பெருமானே கடைந்தான் திருப்பாற்கடலை! இதை மஹரிஷிகளெல்லாம் பார்க்கிறார்கள் – பகவானின் உடம்பு வியர்த்துக் கொட்டுகிறதாம். அப்படி தேக சிரமப்பட்டுக் கடைகிறான் அவன்.

இன்னொருத்தருக்காக காரியம் பண்ணுகிற பழக்கம் என்பது உலகிலேயே ரொம்பக் குறைவு. நாளைக்குப் பண்ணிக் கொள்ளலாமே, நாளன்னைக்குப் பண்ணிக் கொள்ளலாமே என்று தோன்றும். அடுத்த மாதம் தானே... இன்னும் இருபது நாட்கள் இருக்கிறதே என்று தோன்றும். ஆனால், இவருக்கே காரியம் ஆக வேண்டுமானால் 'இப்போதே போகலாம்; வாரும்!' என்று கிளம்பிவிடுவார்.

பகவானும் இதற்கு விதிவிலக்கு இல்லை! ஏனடா இவ்வளவு சிரமப்படுகிறான் என்று பார்த்தால், இவனுக்கு லக்ஷ்மி கிடைக்க வேண்டும் அல்லவா! அதற்காகத்தான் பாடுபட்டான் பரமாத்மா.

கீழே தாங்குகிறான், மேலே தாங்குகிறான், கடையவும் கடைகிறான் பரமாத்மா.

**சர்வகர்மஸமாராத்யத்வம்** – இது அடுத்த லக்ஷணம். சர்வ கர்மாக்களினாலேயும் ஆராதிக்கப்படக் கூடியவன் அவன் தான்.

எல்லாவற்றையும் யார் சாப்பிடுகிறார்கள்? விஷ்ணுதான் சாப்பிடுகிறான் என்கிறது வேதம்.

சமஸ்தத்தையும் தன் வயிற்றில் அடக்கிக் காட்டுகிறான் எம்பெருமான்.

'என்னிடத்திலிருக்கக் கூடிய தமோ குணத்தையெல்லாம் நீ விழுங்கு – போக்கடி! என்று அவனிடம் பிரார்த்திக்கிறது ஒரு மந்திரம் – நரசிம்ஹனிடத்திலே பிரார்த்திக்கிறது.

சமஸ்தத்தையும் விழுங்கிக் காட்டினான் யசோதைக்கு.

'வையகம் வாயுள் கண்ட' அவன் 'ஆயர் புத்திரனல்ல; அருந்தெய்வம்!' என்று சொல்கிறார் பெரியாழ்வார். இவன் வாயைத்திறந்து காட்டினால், லோகமே சுற்றுகிறது உள்ளே! எல்லாம் இருக்கிறது. ஆகையினாலே இவன் ஆயர் புத்திரன் அல்லன்; இவன் சாக்ஷாத் பரமாத்மா.

'நகல கோபிகா கிருஷ்ணா நந்தனோத்பவான்' – இந்த சுலோகம் பாகவதத்திலே இருக்கிறது.

அதைத்தான் சொல்கிறார் ஆழ்வாரும். நீ கோபஸ்த்ரீயின் புதல்வன் அல்ல; சாக்ஷாத் பரமாத்மா என்கிறார். கிருஷ்ணாவதாரத்தில் இன்னும் இரண்டு முறை அவன் யார் என்பதைக் காட்டினான்... அவற்றையும் நாம் பார்த்துவிடுவோம்.

*(வளரும்)*



UA

# வில்லன்

'இப்படித்தான் கேட்கிறார்கள்' என ரசிகர்கள் தலையில் பழியைப் போட்டுப் படமெடுக்கும் கோடம்பாக்கத்து ஃபார்முலா விதிகளைக் கொஞ்சமும் மீறாமல் வந்திருக்கிறார் வில்லன்.

கறுப்புப் பணத்தைக் கொள்ளையடித்து உடல் ஊனமுற்ற இல்லங்களுக்குத் தருகிறார், மாநகரப் பேருந்தில் வேலை பார்க்கும் நடத்துனர் சிவா (அஜித்). மனவளர்ச்சி குன்றிய தமது ட்வின் சகோதரர் விஷ்ணுவோடு (இவரும் அஜித்), சிறுவனாக வீட்டை விட்டு வெளியேறும் சிவா, ராபின் ஹூட்டாக மாறி விடுகிறார். கதை உபயம் யூகிசேது. ஆனால் திரைக்கதை கே.எஸ். ரவிகுமாருடையதாயிற்றே! காரம், மணம், குணம் நிறைந்த கலர்ஃபுல் மசாலா காக்டெயிலுக்கு ஏற்பாடு செய்து, நன்றாக 'ஃபிலிம்' காட்டுகிறார் இயக்குனர்.

மனவளர்ச்சி குன்றிய விஷ்ணு கேரக்டரில் நடிக்க, அஜித் மேற்கொண்டிருக்கும் முயற்சியைப் பாராட்டியே தீர வேண்டும். நண்பர்கள் கூட்டணியோடு கொள்ளையடிக்கும் கண்டக்டர் அஜித், உடம்பைக் குறைத்து, ஆக்ஷன், டூயட் என்று அமர்க்களப்படுத்துகிறார். ஆனால் அவரது பேருந்தில் பயணிக்கும் கல்லூரி மாணவிகள் அத்தனை பேரும், அவருக்காக 'லோ... லோ...' என்று அலைவதுபோல, மூன்றாந்தரமாகச் சித்திரிக்கப்பட்டிருப்பது அபத்தம். கதாநாயகி கிரண் இந்தக் கதையமைப்பில் பலியாடு ஆக்கப்பட்டுள்ளார்.

'ஒன்... டூ... த்ரி' படத்தை நினைவு படுத்தினாலும், பிக்பாக்கெட்டாக வரும் பாப் கருணாஸ், கண்டக்டர் அஜித்தின் உண்மையான முகத்தைத் தோலுரித்துக்காட்ட இன்ஸ்பெக்டர் பாண்டுவிடம் அடிக்கடி மாட்டி விடுவதும், இறுதியில் அது தோல்வியில் முடிவதும் கலக்கல் கலகலப்பு.

வித்யாசாகரின் இசையில் பாடல்கள் ஏதோ பரவாயில்லை என்கிற ரீதியில் இருக்கின்றன. இரண்டரை மணி நேரம் சும்மா பொழுது போக்கத் தயாராயிருந்தால் மட்டும் வில்லன் ஹீரோவாகத் தெரியலாம்...

— விஷுவல்தாசன்

● ஆவரெஜ்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Pvt. Ltd. Editorial Team : C. Egnath Raj, Anuradha Sekhar, C.Jesudoss. Layouts : S.Stephen, P.R. Rajan.
Editor : Seetha Ravi.
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 330/-; Half Yearly Subscription : India : Rs. 165/-
Overseas (Air Mail) Annual : 62 U.S. Dollars, Srilanka Rs.2000/-



உங்கள் ஃப்ரண்ட்லோடரில் நீங்கள் எதைப் போடுகிறீர்கள்
என்பது பற்றி ஜாக்கிரதையாக இருங்கள்.

அரித்தல், மெஷின் தேய்மம், மோட்டாரின் ஓவர்லோட், நிறம் வெளிறிப்போன ஆடைகள். இவையே உங்கள் ஃப்ரண்ட்லோடரின் அதிநவீனத்திற்கு ஏற்ற கொடுக்காதபடி ஃபார்முலேட் செய்யப்பட்ட வாஷிங் பவுடரை உபயோகிப்பதால் ஏற்படும் சில பக்க விளைவுகளின் அனுபவங்கள். உங்களுக்குத் தேவை சர்ஃப் எக்செல்மேடிக். இது ஒரு குறைவான நுரைதரும், அதிக ஆற்றல் வாய்ந்த, அரித்தலை எதிர்க்கும் உங்கள் வாஷிங் மெஷினுக்கான டிடெர்ஜென்ட். இது உங்களுக்கு சிறந்த தூய்மையைத் தவிர வேறெதையும் தருவதில்லை. ஆம், உங்களுக்கு இது மிக முக்கியமான ஒன்றைத் தருகிறது-மன நிம்மதி.







வல்லுநரை நம்புங்கள்

Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka.




தம. 1 தரம்

உங்கள்
எண்ணங்களுக்கேற்ற
பல
வண்ணங்களில் ...

அக்ஸார்செம்




Agsarcem

Water Proof Cement Paint

From the house of Agsar Paints Pvt. Ltd.
Tuticorin

sreshta.agsar.355

 நீரிலிருந்து சுவர்களுக்கு பாதுகாப்பு
 நிலையான தரம்
30க்கும் மேற்பட்ட நிறம்
 நியாயமான விலை
 பாசி படியாது
 மங்காத நிறம்